வீரபாண்டியன்

# கட்டபொம்மன்



சினிமாக்களில் திரை வசனம் இயற்றும்

ஆசிரியர்:

**ஆர். வி. பதி**

**கலைமகள் அச்சகம்**

காலாடிப்பேட்டை திருவொற்றியூர் சென்னை 19

பதிப்புரிமை 1954 அணா பனிரெண்டு




# உரிமை அறிவிப்பு

இதனுல் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில் முத்துப் பேட்டை ஆர். வி. பதி அவர்களால் இயற்றப்பட்ட வீரபாண்டியன் கட்டபொம்மன் கதையை வெளியிட நான் மேல்படியாரிட மிருந்து சகல சுதந்திரத்துடன் பெற்றுகொண்டேன் ஆகையால் இதிலுள்ள கருத்துகளேயோ வசன காவியத்தையோ சேர்த்தோ குறைத்தோ அச்சிடலாகாதென்று கனம் பொருந்திய கவர்மெண்டார் சட்டபடி ரிஜிஸ்டர் காபிரைட் செய்ய பெற்றிருப்பதை என் அனுமதி இன்றி அச்சிட்டால் நான் கோரும் நஷ்டத்தை அச்சிட்டவரிடமிருந்தோ உபயோகபடுத்தினவரிட மிருந்தோ வசூலிக்க எனக்கு உரிமை உண்டு அல்லாமல் காபிரைட் உல்லங்கனம் செய்த குற்றத்திற்கு உள்படுவார்கள் என்பதை தெரியபடுத்துகிறேன்.

இப்படிக்கு,

**T. R. பாலகிருஷ்ண முதலியார்**

# வீரபாண்டியன்

# கட்ட பொம்மன்

## குருமலை

### காட்சி 1. இடம்:- செல்லபொம்மு இல்லம்

[உருப்பினர் செல்ல பொம்மு கட்ட பொம்மு ஊமதுரை. செல்ல பொம்மு தன் மகன் கட்டபொம்மு இடமும் ஊமதுரை இடமும் எட்டயா புரத்து ராஜாவை பார்க்க வேண்டும் இல்லா விட்டால் நமக்கு ஆபத்து என்று கூறுகிறார்]

செல்லபொம்மு:- கட்டபொம்மு நாளை காலை உதயத்திற்குள் கண்டு காணிக்கை செலுத்தி வரவேண்டும் எட்டயா புரத்து ராஜாவுக்கு இல்லா விட்டால் விபரீதம் நேரிடும் நமக்கு............

கட்டபொம்மு:- (சிரிப்பு) அப்பா........அப்படியே போகலாம் ஆனல் அப்படிப்பட்ட அந்த எட்டயா புரத்து அரசரை நான் காணவேண்டும் இப்படி கண் மூடித்தனமான செய்கையை உடைத்தெரிய வேண்டும் நாளை என்ன இன்றே போகலாம்

ஊமதுரை:- நல்ல முடிவு நாட்டு மக்களை நசிக்கி ஆளும் அந்த நயவஞ்சக எட்டயா புரத்தானுக்கு அழிவு ஆரம்பம் ஆகிவிட்டது உரையிலே உரங்கிய வாளுக்கு இரை கிடைக்கும் நாள் இப்போதே........புரப்படுங்கள்

செல்லபொம்மு:- என் செல்வ குழந்தைகளே சீமான்களும் கோமான்களும் செல்வத்தில் புரலும் சில சிருமதி கொண்டவரும் செந்தமிழ் நாட்டை ஆளுகின்றனர் அந்த பழக்கத்தை உண்டு பண்ணி விட்டனர் இதை மாற்ற முடியுமா?

கட்டபொம்மு:- முயன்ருல் முடியாதது உண்டோ? முத்தமிழ் நாட்டில் இப்படிபட்ட மூடர்களை முறியடித்தே ஆக வேண்டும்

ஊமதுரை:- சிதைந்த பொன் நாட்டை சிரப்புற்று வாழ செய்வதே நம்கடமை மடமையில் தவழும் மக்களை மனிதர்களாக்குவதே நம் கொள்கை

செல்லபொம்மு:- கண்மணிகளே உங்கள் கர்ச்சனை கண்டு களிப்புருகிறேன் ஆனல் ஆழமானசேற்றில் அடியை வைத்து விட்டு பிறகு அவஸ்த்தைபடக் கூடாது அதனல் சற்று அமைதியாகவே சந்திப்போம் பிறகு சமயம் வரும்

கட்டபொம்மு:- சமயம் சந்தர்ப்பம் இவைகள் சதிகாரர்கள் வகுத்த திட்டம் அந்த கட்டத்தில் நாம் அடங்கி கிடந்தால் புதுமை காண முடியாது புரட்சி தீ மூட்டியே ஆகவேண்டும் புழுபோல் துடிக்கும் மக்களை மீட்டே தீர வேண்டும் பிரந்த நம் கடமை இது

ஊமதுரை:- அப்பா அவனியில் அரசர் இருக்கத்தான் வேண்டும் ஆனல் இப்படி அடக்குமுறை தர்பார் ஆட்சி செலுத்துவதை கண்டு இருக்க முடியாது அந்த உலுத்துபோன உதவாக்கரை சட்டத்தை உடைத்தெரிய வேண்டும்

## காட்சி 2.

இடம்:- எட்டயாபுரத்து அரண்மனை

[ராஜதர்பார் ராஜா அமைச்சரைநோக்கி செல்லபொம்மு வராததுபற்றிவிசாரிக்க அது சமயம் செல்லபொம்மு தன் குழந்தை இருவருடன் வருதல்]

அரசர்:- அமைச்சரே தமிழ் திருநாள் பொங்கல் புது நாள் இந்த நன்னுளில் அநேகமாய் எல்லோரும் வந்து விட்டனர் இன்னும் அந்த செல்லபொம்மு வரவில்லை

அமைச்சர்:- ஆம் அவன் போக்கு விபரீதமாகக்....காரணம் அவன் குழந்தை இருவர் தான் அவர்கள் வீரம்பேசு கின்றனரும்

அரசர்:- வீரமுழக்கமிடும் அந்த வெறிபயலுக்கு நாம் செய்த உதவிகளை மரந்து விட்டான் மண்குடிசை யில் வாழ விடாமல் மாளிகை யாக்கி தந்தோம் மந்த மாருத தென்றல் அவனை மமதையாக்கி விட் டது மடையன் மரியாதை யாக வாழத்தெரியாதவன் மன்னனுக்கு மரியாதை செலுத்தாதவன்

[செல்லபொம்மு கட்டபொம்மு ஊம துரை வருதல் அரசரை செல்லபொம்மு வணங்க கட்டபொம்மு ஊமதுரை வணங் காது நிற்க இதைகண்டு அரசர் ஆத்திரங் கொள்கிருர் இந்த சமயம் வந்த]

செல்லபொம்மு:- வணக்கம் அரசே தங்களுக்கு செலுத்தும் காணிக்கை செலுத்திவிட்டேன் என் செல்வக் குழந்தைகள் தங்களை காண வந்து இருக்கின்றனர்

[என்ருர் செல்லபொம்மு. அரசர் கட்ட பொம்மு ஊமதுரை இருவரையும் நோக்கினுர் வணங்காது நின்ற இருவரையும் பார்த்து]

அரசர்:- அறிவில்லாத அர்ப்பர்கள் அரசனுக்கு மரி யாதை செலுத்த தெரியாத மடையர்கள் மதயானை போல் மன்னனுக்கு முன் மார்புயர்த்தி நின்றவர் இந்த மானிலத்தில் யாருமே கிடையாது இப்படி பட்ட மக்களை பெற்ற மகிழ்ச்சியை சொல்ல வந்த

செல்லபொம்மு உன் குணத்திற்கு இந்த ஒரு முறை மண்ணிக்கிறேன்.

கட்டபொம்மு:- அரசே ஆத்திரத்தில் அள்ளி வீச வேண்டாம் ஆணவ சொர்களை. தாங்கள் காண வேண்டும் என்று கட்டளை இட்டீர்களாம் அதற்கு இணங்கியே வந்தோம் வந்ததும் எங்களை வரவேர்க்காத உங்களை வணங்க என்மனம் இடம்தரவில்லை

அரசர்:- பத்தாயிரம் பாளயக்காரர்கள் என்பாதத்தில் வாழ்கின்றனர் இப்படி பதில் கொடுத்தவர் யாருமே இல்லை காணிக்கை செலுத்த கடமை தவரியதும் இல்லை வீரவாளும் வேல்வேந்தனும் கூட என் இடம் வீரம் பேசியதில்லை காளைகள் பல உண்டு என் காவலுக்கு

செல்லபொம்மு:- அரசே அடுத்த முறை சந்திக்கிருேம் நாங்கள் வருகிருேம்

(போகுதல் மூவரும் போனதும்)

அரசர்:- என் எல்லையில் எவனுமே எதிர்த்தது இல்லை என் சொல்லை தட்டி நடந்ததும் இல்லை அரியாதவன் தெரியாமல் பேசுகிருன் தீரமும் வீரமும் தரை மட்ட மாகிவிடும் என்பதை அறியாத தருதலை பயல்

**காட்சி 3. இடம்:- குருமலை**

[செல்லபொம்மு தன் குழந்தை இருவர் இடமும் வேரு இடமான செக்காபுரம் போக வேண்டும் என்ருர்]

செல்லபொம்மு:- கண்மணிகளே நான் சொல்வதை கேளுங்கள் எட்டயாபுரத்தானுக்கு எதிர்ப்பு காட்டியவன் எவனுமே வாழ்ந்தது இல்லை அவனுக்கு அடங்கி

இந்த இடத்தில் நாம் இருப்பதும் ஞாயமில்லை நாம் செக்க நகர் செல்வோம்

கட்டபொம்மு:- சரியான திட்டம் தம்பி அப்பா சொல்வது சரி தான் அவனியில் நம் புகழ் ஓங்கவேண்டும் திக் கெட்டும் நம் ஜெயக் கொடி பரக்க வேண்டும் கட்டி யாள்கிறோம் என்ற எண்ணம் கொண்ட கயவர்கள் சிரம் நம் காலடியில் உருளவேண்டும் வெற்றிமுரசு நாம் கொட்டவேண்டும் வீரனும் வேந்தனும் நமக்கு அடிபணியவேண்டும்

ஊமதுரை:- அப்படியானால் புரப்படுங்கள் அங்கே உரங்கி கிடக்கும் நம்மவர் உள்ளத்தை தட்டி எழுப்பி கட் டான ஓர் படை திரட்டி காத்திடுவோம் நம் கன்னி தமிழகத்தை

(அனைவரும் புறப்பட்டு போகுதல்)

## காட்சி 4. இடம்:- கம்பளத்தார்கள் வாழும் ஊர்

[கட்டபொம்மு ஊமதுரை செல்ல பொம்மு செல்வதை கண்ட கம்பளத் தார்கள் ஓடிவர அதில்]

ஒருவர்:- எங்களை இதுவரை மரந்து இருந்த உங்களுக்கு வணக்கம் வாங்கள் இனி நீங்கள் எங்கேயும் செல்ல வேண்டாம் இங்கேயே இருங்கள் உங்களுக்கு என்ன வேண்டுமோ செய்கிறோம் நாங்கள்

செல்லபொம்மு:- சபாஷ் அப்படியே இருக்கிறோம்

(அனைவரையும் அழைத்து சென்றதும்)

கட்டபொம்மு:- தம்பி தரணியில் நாம் ஆள பிறந்தோம் அதை அறியவில்லை அந்த எட்டயா புரத்தான் அந்த ஏமாளி கொட்டத்தை அடக்கியே தீரவேண்டும் நமக்கு

சொந்தமான நாட்டை நாம் காத்தே தீரவேண்டும்
இந்த திட்டம் நம்கையில் தான் இருக்கிறது

ஊமதுரை:- பட்டத்தை கட்டி கொண்டு நம்மை பஞ்சைகள் என்கிருன் எட்டயா புரத்தின் எதேச்சை அதிகாரன் இதை எதிர்த்தே ஆக வேண்டும் அந்த எட்டயா புரத்தானை நம்வாளுக்கு இரையாக்கியே தீரவேண் டும்

கட்டபொம்மு:- வீரத்தின் இருப்பிடமாம் தீரத்தின் திரவு கோலாம் காரண மில்லாமல் கட்டியாளுகிருன் கய வன் அதற்க்கு கைகட்டி நிற்க்க வேண்டுமாம் நாம் இது நடக்க கூடியதா என்பதை மரந்து விட்டான் அந்த நன்றி கெட்ட................நாய்

ஊமதுரை:- உலகம் உள்ள மட்டும் நம் வீரத்தின் ஒலிகள் வீரிட்டு ஒலிக்க வேண்டும் நம்மை எதிர்ப்பவர் யாராயினும் நாயைபோல் அடித்தெரிய வேண்டும் தீரமிருந்தவர் நாம் என்று திக்கெட்டும் முரசு கொட் டட்டும் பட்டத்தான் யாவரும் பரந்தோடி வரட்டும் பதில் சொல்லும்............இந்த............வாள்

கட்டபொம்மு:- பயிந்தமிழ் நாட்டிலே பண்புடன் அன்புடன் வாழ்கிருன் ஆள்கின்றனர் என்று நம்மை பாரெங் கும் புகழ வேண்டும் செக்க நகர் சிங்க தமிழர்களை சீரி எழும் காளைகளை படைகளாக்குவோம் வங்கம் முதல் கொங்கு வரை வாழ்ந்திட்டோம் நாம் என் பதை அந்த வஞ்சகருக்கு எடுத்து காட்டுவோம் எத்திசையிலும் நம் படைகளை எதிர்க்க முடியாமல் செய்வோம் எவரேனும் நம்மை எதிர்த்தால் அவர் களை கண்ட துண்ட-மாக்கிடுவோம் கழுகுகளுக்கு இரை கொடுத்திடுவோம் போர் முரசு கொட்டிடு வோம் புரமுதுகு காட்டோம்

ஊமதுரை:- பாசறையிலே பதுங்கி இருப்பார்கள் சிலர் பவளத்தேரிலே ஒதுங்கி இருப்பார்கள் பலர் காட்டிலே மறைந்து இருப்பார்கள் சிலர் காசை நீட்டி கட்டி விடபார்ப்பார்கள் பலர் குன்றின் மீது இருந்து கொடுமை செய்வார்கள் சிலர் குவலயத்தில் இந்த கூட்டங்கள் குள்ளநரிபோல் மெள்ள தப்பி செல்வார்கள் அவர்கள் எங்கு இருந்தாலும் சரி என்ன செய்தாலும் சரி மன்னவன் ஆனாலும் சரி மாரை பிளந்தே ஆக வேண்டும் இந்த மண்ணில் புதைத்தே தீரவேண்டும் கட்டபொம்மன் ஊமதுரை வாழும் இடத்தில் காகம் கூட பறக்ககூடாது கட்டளை இடு இன்றே வாள் பிடிக்கும் வீரத்தில் வண்டமிழ் நாட்டானுக்கு ஈடிணை இல்லை என்பதை எடுத்து காட்டும் தமிழன் தரணியில் உயர்ந்தவன் என்பதை உலகம் உணரட்டும் உலுத்தர்கள் ஓடி ஒளியட்டும் புலிகளை போல் வாழ்ந்த நாம் பூனைகள் ஆக மாட்டோம் என்பதை அந்த புத்தி கெட்ட எட்டபா புரத்தானை போன்ற ஏமாளிகள் உணரட்டும் கட்டுடன் நம் படைதிரளட்டும் நாடெல்லாம் நமக்கே சொந்தம்

கட்டபொம்மு:- எரிமலையை எதிர்க்கும் இதயம் கொண்ட நாம் கொந்தளிக்கும் கடலில் குதித்து செல்லும் வல்லமை கொண்ட நாம் மாரிலே வாள் பாய்ந்தாலும் வீரமுடன் மடிவான் மரத்தமிழன் என்பதை மாநிலத்தில் மார் நிமிர்ந்து சொல்லுவோம் நமக்கு இடையூரு யார் செய்தாலும் வெல்வோம் வீரபரம்பரை நாம் என்பதை அந்த வீணர்களுக்கு எடுத்து காட்டுவோம்

[இப்படி பேசிய கட்டபொம்மு ஊமதுரை இருவரையும் கண்டு இளம் வாலிபர்

கள் துள்ளி எழுந்தனர் படை திரண்டது பட்டாளமாக்கினர் கட்டபொம்மு அப்போது அவர்கள் அணிவகுத்து நின்றதை கண்ட]

கட்டபொம்மு:- வாள் ஏந்தும் நம் கரத்துக்கு முன் வையகமே எதிர்த்தாலும் சரி போர்களம் புகும் நம்மிடம் பூவுலகும் திரண்டெழுந்தாலும் சரி புரமுதுகிட்டு ஓடக்கூடாது வீரமுடன் போர் புரிவோம் வெல்வோம் மடிந்தாலும் மாரிலே வாள்ஏந்தி மடியவேண்டும் இல்லா விட்டால் வீரமாய் சமர்புரிந்து சாக வேண்டும் இந்த சாம்ராஜ்யத்தில் எவனுமே நமக்கு சமம் இல்லே என்று சரியான தோர்பாடம் கற்பிக்க வேண்டும் கன்னி தமிழ் நாடெங்கும் நம் காவலுக்குள் இருக்க வேண்டும் இதற்கு முக்கியம் ஒற்றுமையும் வீரமும்தான் இதில் இருந்து ஒருவரும் தவர கூடாது இந்த திட்டங்களுக்கு மாருக ஒருவர் நடந்தாலும் நம்கட்டு பாட்டை அது சிதைத்து விடும்

படையினர்:- இதில் தவர மாட்டோம் இமயத்தை பிளந்தெரிய வேண்டுமானுலும் சரி இதயம் பலி யிட்டாவது செய்தே முடிப்போம் சிரப்புர நம்படை சென்று நம்மை எதிர்ப்பவரை நசிக்கியே தீரும் கம்பளத்தார்கள் படை கலேக்க முடியாதது உடைக்க முடியாதது ஊமதுரை கட்டபொம்மை வெல்ல உலகத்தில் யாருமே இல்லே என்பதை எடுத்து காட்டியே தீரும் அவணியில் நம்மை அடக்கி ஆள நினேப்பது ஆண்டவன் ஆனுலும் சரி அழித்தே தீருவோம் சிதைத்தே தீருவோம் கலங்க மாட்டார்கள் கம்பளத்தார்கள் படை என்று பறை சாற்றுவோம் படை அமைத்து விட்டோம்

ஊமதுரை:- முத்தும் பவளமும் விளைந்த நம் நாடு முல்லை மணக்கும் முத்தமிழ் நாடு தொத்து நோய் போன்றவர் வித்தைகள் செல்லாது துன்மார்க்கர் துர்நாற்றம் இங்கே செல்லாது

கட்டபொம்மு:- தோள் துடிக்க மார்புயர்த்தி வாளேந்தி நிற்கும் வீரினங்காளைகளே வாருங்கள் வேட்டைக்கு புரப்படுவோம் காட்டிலே மிருகத்தை வேட்டையாடும் நம்மை கண்டிக்க யாரவது வந்தால் நம் கத்திமுனை பதில் கொடுக்கும் நம்மை எதிர்ப்பவர் யாரா இருந்தாலும் சரிதான் இந்த வாளுக்கு அவன் இரையாக வேண்டும் காட்டிலும் உரிமை கொண்டாடும் அவனை கண்ட துண்ட மாக்கிட வேண்டும் கட்டபொம்மன் யாருக்கும் கைகட்டி நிற்க மாட்டான் என்று காட்டிட வேண்டும்

ஊமதுரை:- காடென்ன நாடெல்லாம் நாம் செல்லவேண்டும் நமக்கு அடிபணிய வேண்டும் இல்லை என்றுல் இந்த வாளுக்கு இறை கொடுத்து வருவோம் புரப்படுங்கள் கண்டவர் கலங்கட்டும் ஆள்பவர் அஞ்சட்டும் அக்ரமக்காரர்கள் அலரி ஓடட்டும் சூட்சியால் வாழும் சுயநலக்காரர்கள் சுக்கு நூருகி மடியட்டும் சிங்கதமிழகத்தில் இனி சிறுநரி நடமாட முடியாமல் போகட்டும் நல்லதோர் நாடாக்குவோம் நாம்பிறந்த பொன்னுட்டை

(அனைவரும் புரப்பட்டு வேட்டைக்கு செல்லுதல்)

## காட்சி 5. இடம்:- குருமலைக்காடு

[அங்கு எட்டயா புரத்தார்களும் வேட்டையாடுகின்றனர் அந்த சமயம் அந்த காட்டில் வேட்டையாடி வரும்

ஊமதுரை கட்டபொம்மு ஓர் பன்றியை ஈட்டியால் குத்த அதுசமயம் வீழ்ந்ததை கட்டபொம்மு தூக்க எட்டயா புரத்தார் வந்து]

ஒருவர்:- இந்த பன்றி எங்களுக்கு சொந்தம் கொடுத்து விடு

கட்டபொம்மு:- இத்தனை படைகளுக்குமுன் இதை நான் கொன்றேன் இதை எப்படி உமக்கு கொடுப்பேன்

எட்டயா புரத்தார்:- அதை பற்றி தெரியாது இந்த இடத்தில் வேட்டை யார் ஆடினலும் அது எட்டயாபுரத்திற்கு சொந்தமானது அதை கொடு

ஊமதுரை:- கொன்றவர் யாரா இருந்தாலும் அது கொற்றவனுக்கு சொந்தம் என்றால் இது குதற்க்கமான பேச்சி எங்கள் கோபத்தை கிளராதே

எட்டயா புரத்தார்:- எங்களை எதிற்த்தவர் யாரும் இத்தரணியில் வாழ இல்லை இதுவரையில்

கட்டபொம்மு:- கட்டபொம்மன் முன் நின்று இப்படி கடும் சொர்க்களை பேசியதும் இல்லை பிழைத்து போவாளுக்கு வேலை கொடுக்காதே வாதாட்டம் பேசாதே

[எட்டயா புரத்தான் வாள் எடுக்க கட்டபொம்மு அவர்களை விரட்டி அடித்து விட்டு திரும்புகிறார்கள் அந்த சமயம் கட்டபொம்மு சாலி குளத்தில் வேட்டையாடினன் அது சமயம் முயல் நாயை விரட்டியது இதை கண்டு கட்டபொம்மு ஆச்சரியமாய் வந்து ஊமத்துரை இடம்]

கட்டபொம்மு:- தம்பி ஊமைதுரை தரணியை நாம் எதிர்த்தாலும் தஞ்சம் அடைவார்கள் வானுலகில் நமக்கு நிகர் யாருமே கிடையாது விண்ணுலகும் மண்ணுலகும் வீழ்ந்து மடிவார்கள் இது தின்னம் என்ன அதிசயமான காட்சி காணமுடியாத மகிமை கட்ட வேண்டும் இப்போதே நம் கோட்டை அங்கே அப்போது நம்மை குவலயத்தில் எந்த கொற்றவன் ஆனுலும் எதிர்க்க முடியாது...........

ஊமதுரை:- அப்படி அதிசயம் என்னண்ணு இங்கே

கட்டபொம்மு:- அற்ப்புதமான அதிசயம் நாயை முயல் விரட்டியது இதுவரை கண்டிராத காட்சி

ஊமதுரை:- நல்லது அண்ணு அங்கே இன்றே நம் கோட்டை எழுப்புவோம் எட்டே நாளையில் எவரும் கண்டு வியக்கும்படி கட்டிட மாக்குவோம் இங்கே தான் ஆட்சி புரிந்திடுவோம் அரண்மனையும் ஆட்சி பீடமும் இங்கே அற்ப்புதமாக எழுப்பிடுவோம் நாம் கன்னி தமிழ் நாட்டு மன்னன் கட்டபொம்மு ஊமதுரை கட்டிய் அரண்மனை இதுவரை கட்டியதில்லை என்று காண்பவர் கலக்கமிட வேண்டும் கண்ணீர் விடட்டும்

[அந்த இடத்தில் அடையாளமிட்டு கோட்டை கட்ட ஆள் கொண்டுவர கம்பளத்தார்களை அழைக்கும் போது காட்டில் ஓர் அபாயக்குரல் கேட்டது ஓடினர்கள் கட்டபொம்மு ஊமதுரை காப்பாற்றிக் கொண்டு வந்தார்கள் ஒரு அழகான ஆனழகனை அவன் பெயர் தான் பாதர் வெள்ளை ஊமதுரையும் கட்டபொம்மும் அடையாளம் இட்ட இடத்தில் அற்புதமான அரண்மனை கட்டி முடிக்க]

ஊமதுரை:- நம்மை பஞ்சைகள் என எண்ணிய பதர்கள் பார்த்து பதரட்டும் சிதரி ஓடட்டும் படைய்த் தலை வன் பாதர்வெள்ளை தான்

[இந்த சமயம் குதிரையில் வேகமாய் வீரமுடன் வந்த கட்டபொம்மு]

**காட்சி 6.**

[இடம்:- பாளயம் கோட்டை கட்டபொம்மு கட்டிய கட்டிடம்]

கட்டபொம்மு:- சபாஷ் ஊமதுரை உலகில் இனி நம்மை அசைக்க முடியாது எதிர்த்தவர்கள் நம் ஈட்டிக்கு இரை யாவார்கள் வாதாட்டம் செய்யும் வஞ்சகர் கள் இந்த வாளுக்கு இரையாகட்டும் வாள் படை தளபதி பாதர்வெள்ளை வா இப்படி

(பாதர்வெள்ளை அருகில் வந்து)

பாதர்வெள்ளை:- உரையில் இருந்து எடுக்கும் இந்த வாளுக்கு இரை கொடுக்காமல் போட மாட்டேன் உலகை ஏமாற்றி உப்பரிக்கையில் உலவும் அந்த எத்தர்கள் யாரா இருந்தாலும் சரி தத்தாரிகள் தலை தரையிலே உருலும் வைரங்களை வைத்துக்கொண்டு வைய் யகத்தை வாங்க திட்டமிடும் வரப்பிரசாதம் பெற்ற வன் ஆனாலும் சரி ராம லக்ஷ்மணனை நாகபாணத் தால் சாய்த்த இந்திரசித் ஆனாலும் சரி சந்திரனும் சூரியனும் வந்தெதிர்த்தாலும் சரி சித்ரவதை செய்ய படுவது தின்னம் கடல் கண்ட மட்டும் நம்மையார் எதிர்த்தாலும் சரி இந்த கத்திக்கு பலியிட்டு கட லுக்கு இரை கொடுப்போம்

[கட்ட கருப்பன் சுந்தரலிங்கம் இரு வரும் வந்து படையில் சேர ஆசைபடுவ. தாக கூறுகிறார்கள்]

கருப்பன்:- கலங்கி தவித்திடும் மக்களை காத்திடும் எங்கள் தலைவர் கட்டபொம்மு உங்கள் படையில் எங்களையும் சேர்த்து கொள்ளுங்கள் உண்மைக்கு பாடு பட்டு உழைத்திடுவோம் உலகுக்கு நம் திரமை எடுத்து காட்டிடுவோம் எங்கள் இருவரையும்........

சுந்தரலிங்கம்:- ஆம் ஆணவம் கொண்டு திரியும் அந்த அரிவிலிகளை அழித்தொழிப்பதற்க்கு நாங்கள் முன்னனியில் நிர்ப்போம் முரசு கொட்டி அழிப்போம்

கட்டபொம்மு:- சரி ஊமத்துரை இவர்களை பிரித்து ஒவ்வொருவருக்கும் ஏற்ற உத்யோகம் கொடு

ஊமதுரை:- வாள் போர் படைக்கு பாதர்வெள்ளை தளபதி ஈட்டி போர் படைக்கு கருப்பண்ணு தளபதி சுளிக்கு போர் படைக்கு சுந்தரலிங்கம் தளபதி சுழல் குச்சி படைக்கு குப்பண்ணு தளபதி குதிரை படைக்கு வீரண்ணு தளபதி கண்டிப்பு கணக்கு இவைகளை தானுபதி பிள்ளை பார்க்கட்டும்

பாதர்வெள்ளை:- ஆம் சரிதான் அண்ணு இப்படி நம்படைகளை வகுத்தால் தான் எவரையும் நாம் எதிர்க்க முடியும் விரைவில் வெல்ல முடியும் வீரிளங்காளைகளை கொண்டு வீரமுழக்கமிட வேண்டும்

ஊமதுரை:- சபாஷ் பாதர்வெள்ளை

[பாதர்வெள்ளை கருப்பண்ணு குப்பண்ணு தானுதிபதி சுந்தரலிங்கம் வீரண்ணு அனைவரும் வணங்க இவர்களை கண்ட]

கட்டபொம்மு:- அன்புள்ள என் வீரமிக்க படைத்தோழர்களே வெற்றி நமக்கே வீரமிருந்தவர் நாமே எந்த காரியத்தையும் ஏகோபித்துசெய்தால் எதிர்ப்பவர் இந்த அவனியில் எவரு இருந்தாலும் அழிவது தின்னம்

வீரண்ணை:- பார் புகழ ஆண்ட நாம் பரம்பரை பழிகாரர்களால் பாழ் படுத்த பட்டோம் பழிக்கு பழி வாங்க வேண்டும் இந்த பத்தாயிரம் பாளயக்காரர்களும் நம் பாதம் படிந்து நடக்க வேண்டும் இல்லா விட்டால் அந்த வஞ்சகரை சின்ன பின்னமாக்கி சிதாடியுங்கள்

ஊமதுரை:- அரசாங்கம் அமைத்த இன்றே நாம் தூத்து நகர் சென்று வருவோம் வழியில் எவரேனும் எதிர்த்தாலும் வழி மரித்தாலும் நம் சட்ட திட்டங்களை காட்டி சமர் புரிவோம் சலோ அஞ்சா நெஞ்சன் அடைக்கலம் புரப்படு............அண்ணை வாங்கள்

[கட்டபொம்மன் ஊமைதுரை படைகளோடு தூத்துகுடி செல்கிறது அதை கண்ட பாளயக்காரர்கள் பயந்து ஓடி ஒளிந்தனர் தூத்து குடியில் பக்கத்தில் பாளயபட்டார் கட்டபொம்மை மரித்து]

பாளயபட்டார்:- கட்டபொம்மா கப்பல் துரை முகமான தூத்து குடிக்கு இப்படி கட்டான படைகளோடு சென்ருல் கடுமையான கொடுமைகள் ஏற்ப்படும்

கட்டபொம்மு:- என் நாட்டின் எல்லை தூத்து குடியிலே என்னை எதிர்ப்பவன் யார்? இனி இந்த துரைமுகம் எனக்கு சொந்தம் பயந்தோடும் பாளயபட்டான் நீங்கள் உங்களிடம் என்ன பேச்சி கடலில் சொந்தம் கொண்டாடும் அந்த கயவர்கள் வரட்டும்

ஊமதுரை:- இந்த பஞ்சைகளை பார்த்து படையை நிறுத்தி பதில் சொல்வதா புரப்படுங்கள்

வீரண்ணு:- ம் தூத்துநகர் தூள் தூளாகட்டும் துன்மார்க்கர் துடி துடித்து மடியட்டும் துரத்தியடியுங்கள் கண்டவர்களை கட்டி விடுங்கள் புகுந்த இடமெல்லாம் போர்களமாக்குங்கள்

கட்டபொம்மு:- அக்ரம பாளயபட்டான் யாரா இருந்தாலும் சரி அழித்து ஒழியுங்கள் துன்மார்க்கர் துரை விடமான தூத்துநகர் தவிடு பொடியாகட்டும் தமிழன் நாட்டில் குல்லாபோட்ட அந்த கொடியவர்கள் கூடாரமாக்கியதை கூண்டோடு கொளுத்தி விடுங்கள் சேதி கேட்டு சென்னை நகர் சிதரட்டும் மன்னவன் கட்டபொம்மன் என்பதை அந்த மடையர்கள் உணரட்டும் உள்ளே நுழையுங்கள் அந்த ஊதாரி கோட்டை கொத்தளங்களை உடைத்து எரியுங்கள் அந்த வெள்ளை நாயை வெட்டி வீழ்த்துங்கள்

ஊமதுரை:- எங்கே கிடந்தவனுக்கு எட்டடுக்கு மாளிகை இங்கே பிறந்தவனுக்கு இடமின்றி தவிப்பதா எவனு இருந்தாலும் சரி ஈட்டிக்கு இரையாக்கி விடுங்கள் காட்டி கொடுப்பவர்களை கண்டால் கட்டி வைத்து கசையடி கொடுங்கள் நம் திட்டத்திற்கு கட்டு படாதவர் யாரு இருந்தாலும் கருணை காட்டாதீர்கள் கதரி வரட்டும் அந்த சோதாகும்பல் சோற்று பட்டாளத்தை வைத்து வீரம் பேசும் அந்த சூட்சிக்கார கும்பல் சுக்கு நூருக்கி விடலாம் நம் நாட்டின் துரை முகத்தில் நம் வீரோதியா? வீரம் பிரந்த தமிழ் நாட்டின் எல்லையிலே வீணர்படையா?

சுந்தரலிங்கம்:- அடுத்தவனுக்கு அடிபணிந்து ஆள இடம் கொடுத்து விட்டனர் அறிவிலா அற்ப்பர்கள் அதை அழித்தே ஆக வேண்டும் அதை முரியடித்தே தீர வேண்டும் முத்து எடுக்கும் இடத்தில் எத்தர்

படையா சித்தம்கலங்காத சிங்கதமிழ்நாடு எங்கோ கிடந்து எதற்கோ வந்த ஏமாளி கையில் இருப்பதா போகட்டும் படை துரை முகம் தூளாகட்டும் துரை என்ற அந்த மடையர் மண்டைகள் மண்ணிலே புரளட்டும்

[தூத்துகுடி சென்று அனைவரையும் அலர செய்து திரும்பி விட்டனர் கட்ட பொம்மு படையினர். இதை கண்ட பாளயபட்டார்கள்சென்னை துரைக்கு செய்தி அனுப்பி விட்டார்கள்]

(செய்தி விபரம்)

பாளயபட்டார்:- அன்புள்ள துரை அவர்களே கண்டவர் கலங்கிடும் கட்டானபடை அவனை எதிர்ப்பவர் யாரா இருந்தாலும் தப்ப முடியாது என்று சவால் விட்டு பேசுகிறான் பாளயங்குரிச்சியின் பக்கம் அணுக முடியவில்லை அத்தனை கட்டான கோட்டை உடனே தாங்கள் புரப்படவும் இல்லா விட்டால் விபரீதம்

## காட்சி 7. இடம்:- சென்னை வெள்ளையர் பங்களா

[கவர்னர் பாளயபட்டார் அனுப்பிய கடிதத்தை படித்து மேஜையில் எரிந்து விட்டு]

கவர்னர்:- பாஞ்சாலங்குரிச்சில் நம்மை எதிர்க்கும் படையா? நம்துப்பாக்கி குண்டுகளில் சுட்டு சாம்பளான வீரர்கள் எத்தனைபேர் என்பதை அறியமாட்டான் கடலுக்கு கீழ் வாழ்ந்தாலும் நமக்கு கப்பம் கட்டி தீர வேண்டும் என்பதை தெரியாத சிறுவன் யார் மரியாதையாக நம்மிடம் மன்னிப்பு கேட்பானு என்று பார்ப்போம் இல்லா விட்டால் இருக்கிறது நம்

தோட்டாக்கள் அதை ஏந்திசெல்லும் படைவீரர்கள்
(காகிதம் எடுத்து எழுதி முடித்தார் உடனே)

யார் அங்கே (சேவகன் வர) இந்த கடிதம் உடனே ராமநாதபுரம் கலெக்டர் ஜாக்கிஷனிடம் கொடுத்து இதற்க்கு தக்க நடவடிக்கை எடுக்க சொல்....போ

**காட்சி 8.**

(இடம்:- ராமநாதபுரம் கலெக்டர் இல்லம்)

[ஜாக்கிஷன் யோசனை செய்து கொண்டு முன்னும் பின்னுமாக நடந்து கொண்டு ஆத்திரமாய்

ஜாக்கிஷன்:- தூத்துகுடி தும்சம் செய்து விட்டான் பள்ளத்து மீன்களைபோல் பதட்டபட்டு விட்டான் ஒரே வலை யில் அத்தனை பேரையும் அழித்து விடுவோம் என் பதை அறியாத அற்பன் நல்ல பாம்பிடம் மாணிக் கம் எடுக்க பார்க்கிறான் நாரையிடம் மீனை பிடிக்க பார்க்கிறான் நரி இடம் ஆட்டை கேட்க்கிறான் பாம் பிடம் தேரையில் பங்குகொடு என்கிறான் நம் பலம் அரியமாட்டான் வானமுதல் பூமிவரை ஆள பிரந்த நம்மிடம் அகந்தை காட்டுகிறான் அதனால் இவனை சும்மா விடக்கூடாது சுட்டு சாம்பல் ஆக்கியே தீர வேண்டும் சுழல் விளக்கிடம் விட்டில் பூச்சியின் விளையாட்டா?

[கவர்தபால் கொண்டு வந்த சிப்பாய் வேகமாய்]

சிப்பாய்:- இந்த கடிதம் கண்டதும் தக்க நடவடிக்கை எடுக்கும் படி சொன்னார் [கொடுத்ததும்]

ஜாக்கிஷன்:- சரி போய் வா? கவனிக்கிறேன்..........

[மட மட வென்று ஒரு கடிதம் எழுதினுன் கட்டபொம்முவுக்கு]

ஜாக்கிஷன்:- யார் அங்கே? [சிப்பாய் வருதல்] இந்த கடிதத்தை கட்டபொம்மு இடம் சேர்த்து வா [போகுதல்]

**காட்சி 9. இடம்:- பாஞ்சாலங் குரிச்சி**

[கட்டபொம்மு கோட்டை ஊமதுரை மற்றும் அனைவரும் இருக்க ஆத்திரமாய் கையில் கடிதம் வைத்து கொண்டு]

கட்டபொம்மு:- என்ன ஆணவமான அறிவிப்பு குற்றுலத்தில் இந்த குள்ள நரிகள் கூட்டம் போடுவதர்க்கு நாம் செல்ல வேண்டுமாம் அவசியமு அவசரமான காரியமாம் மீட்டிங் கூட்டம் போடுகிறுர்களாம் கொக்கு கூட்டத்தில் ராசாளி புகுந்தால் என்ன ஆகும் என்பதை அறியாத மடையர்கள்

ஊமதுரை:- அவனியை ஆள்கிறேம் என்ற சுந்திரதர்பாரில் நம்மை அழைக்கிறுன் அந்த ஆங்கில வெள்ளரிக்காய்கள் வெட்டி எரிய பிறந்தவர்கள் வீரதமிழ் நாட்டான் என்பதை எங்கே அறிய போகிறுன் ஆயுத பலம் இருப்பதை கண்டு ஆணவம் பேசுகிறுன் அரிவிலி ஆள்பலம் நம்மிடம் என்பதை அரிய மாட்டான் அந்த அர்ப்பன்

பாதர்வெள்ளை:- கோமான்கள் கூட குலாவும் கொற்றவன் கொதிக்கும் எண்ணைக்கொப்பரையில் குதிக்கவும் சித்தமான நம்மை அழைத்து இருக்கிறுன் கண் இருந்தும் கிணற்றில் விழப்போகிறுன் கயவன்

கட்டபொம்மு:- ஆகட்டும் வேலைகள் திரளட்டும் நம் படைகள் அப்படி ஆணவம் படைத்தவன் இடத்தில் நம்

வீரத்தை காட்டியே ஆகவேண்டும் கண்ட பிரகாவது அவன் கர்ச்சனை அடங்கட்டும்

ஊமதுரை:- சூட்சியால் நாட்டிற்குள் நுழைந்த சோதா கும்பல் வீரம் என்றால் விலை என்ன என்று கேட்க்கும் வீணர் கூட்டம் காட்டி கொடுப்பவரை கையில் போட்டுக் கொண்டு நம் நாட்டை ஆளுவதும் அல்லாமல் நம்மை கூட்டம் போடும் குற்றாலத்தில் சந்திக்கும்படி கூறி விட்டான் கொடுமையான கட்டளை இது மடையன் மமதையோடு நமக்கு மகசர் அனுப்பி விட்டான் புரப்படுங்கள் போகலாம்

கட்டபொம்மு:- அந்த அன்னிய நாட்டானுக்கு நாம் அஞ்ச மாட்டோம் என்பதை எடுத்து காட்டியே தீரவேண்டும் தென்னாட்டு எல்லையில் இருந்து அவனை விரட்டியே ஆக வேண்டும் வீரம்பேசும் அவனுக்கு நம் காரணம் காட்டுவோம் தென்திசையை அடக்கிஆளுவது தீயில் குதிப்பதுபோல் என்பதை தெரியாதவன் தில்லு முல்லுகளில் நம்சந்ததிகள்போல் சாம்ராஜ்யத்தில் ஆளுகிறான் சண்டைக்கு சித்தமானவன் போல் நம்மை சந்திக்க சொல்கிறான் சாகசமாக சேகவனை அனுப்பி விட்டான் புரப்படுங்கள் சந்திப்போம் சமரசமாக முடிந்தால் முடியட்டும் இல்லா விட்டால் அந்த கொடியவர்கள் இதயத்தில் நம் ஈட்டிகள் பாயட்டும் குதர்க்கர் கூட்டத்தில் கோடாலிகளை வீசுங்கள் குருதி கொட்டினாலும் கொலைகளத்தில் மடியுங்கள் இல்லா விட்டால் வெற்றி முரசு கொட்டி விரைவில் வருவோம் புரப்படுங்கள்

[கட்டபொம்மு ஊமதுரை பாதர்வெள்ளை வீரண்ணா கருப்பண்ணா குப்பண்ணா சுந்தரலிங்கம் தானாபதி பிள்ளை மற்றும் அனைவரும்

குதிரைபடைகளோடு குற்ருலம் நோக்கி புரப்பட்டனர் காட்டு மிருகங்கள் கூட கண்டு ஓடியது எவரும் எதிரில் நிற்க்க முடியவில்லை]

**காட்சி 10. இடம்:- குற்ருலம்**

[அங்கு இருந்து ஜாக்கிஷனும் துரை மார்களும் திருச்சிபோய் விட்டார்கள் அந்த சமயம் பயங்கர சப்தம் கேட்டு வெள்ளையர் ஓடிவந்து பார்க்க]

கட்டபொம்மு:- குற்ருலத்திலே சந்திக்கும் படி கட்டளை இட்ட அந்த துரைமார்கள் இருக்கிருர்களா?

சேவகன்:- திருச்சிக்கு போய் விட்டார்கள்

கட்டபொம்மு:- திருப்புங்கள் படையை தில்லு முல்லுகள் செய்கிருன் திருட்டு பயல் கள்ளர் குகையில் கன்னக்கோல் இட பார்க்கிருன் முட்டாள்

[திருச்சி நோக்கி படை புரப்பட்டது]

**காட்சி 11. இடம்:- திருச்சி துரைபங்களா**

[கண்டவர் கலங்க வந்த கட்ட பொம்மு படையை கண்ட வெள்ளயர்கள் பயந்து வெளியில் நின்றனர் அந்த சமயம் சென்ற கட்டபொம்மு

கட்டபொம்மு:- குற்ருலத்தில் ச ந் தி க் க சொல்லி தகவல் அனுப்பி விட்டு கூடாரத்தை திருச்சிக்கு மாற்றிய அந்த துரைமார்கள் இருக்கிருர்களா?

சேவகன்:- அவர்கள் ராமநாதபுரம் சென்று விட்டார்கள் உங்களை அங்கு வரும்படி சொன்னுர்கள்

ஊமதுரை:- முதல் சந்திப்பிலேயே அவன் மோசடி வேலை களை காட்டுகிருன் மூர்க்கன் முரியடிக்க வேண்டும் இவனை இந்த பித்தலாட்டக்காரனை பேட்டி காண வேண்டுமாம் பேட்டி

கட்டபொம்மு:- பேடிப் பயல் பயந்து மலைகள் நிரைந்த நாட்டில் மடுவுகளில் ஒளிகிருன் மன்னன் என்று பட்டம் வைத்துக்கொண்டு மணிமுடி தரித்து கொண்டு தவரான பாதையில் செல்கிருன் நிலவை கையால் மரைக்க பார்க்கிருன் மகரமீனை கையில் பிடிக்க கடலில் குதிக்கிருன் சிங்கத்தை சிரைபடுத்த பார்க்கிருன் சிறுநரி பார்க்கலாம் புரப்படுங்கள் ராமநாதபுரம் அங்கும்நமக்கு அவமானமேற்பட்டால் அவன் தலைமை அரசாக்ஷி செய்யும் சென்னை சென்று சின்ன பின்ன மாக்கி வரலாம் எதிர்ப்பவனை கடலில் எரிந்து வருவோம்

ஊமதுரை:- நம் பலம் அறியாத பரங்கிக்காய் வாள் வீசத் தெரியாத வகையற்றவன் வஞ்சகமாய் நம்மை சஞ்சலம் செய்கிருன் புரப்படுங்கள்

[படைகள் ராமநாதபுரம் சென்றது]

## காட்சி 12. இடம்:- ராமநாதபுரம்

[கலைக்டர் ஜாக்கிஷன் மாளிகை அங்கு அனைவரும் இருக்க கட்டபொம்மன் ஆத்திரமாய் குதிரையில் வர மாடியில் இருந்து பார்த்த]

ஜாக்கிஷன்:- துப்பாக்கிகளில் எல்லாம் தோட்டாக்களை நிறப்புங்கள் தக்க பலத்தோடு இருங்கள் எச்சரிக்கை விடும் சமயத்தில் இரும்பு சங்கிலிகளால்

அவனை பிணைத்து விடுங்கள் இருமாப்பு கொண்ட அவன் படைகளை இந்த துப்பாக்கிக்கு இரையாக்குங்கள் எங்கும் இரும்பு கதவுகள் சாத்தி இருக்கட்டும் மேல்மாடி மட்டும் திறந்து வையுங்கள் எவ்வளவு திமிராக குதிரையில் படைகளோடு வருகிறான் வரட்டும் இங்கு அந்த வகையற்றநாய் வெள்ளையர்கள் இடம் வீரம் பேசியவன் இதுவரை யாருமே உயிருடன் உலாவியதில்லை

[கட்டபொம்மு குதிரையில் இருந்து இரங்கி வேகமாய் புரப்பட்டான் கீழ் கதவுகள் எல்லாம் சாத்தி இருப்பதை கண்டவர் கலங்க

கட்டபொம்மு:- தம்பி ஏதோ தந்திரம் செய்து இருக்கிறான்

ஊமதுரை:- சரி அஞ்சவேண்டாம் ஆங்கிலேயன் அழிவு காலம் ஆரம்பம் முதல் போர் நம்மால் முறியடிப்போம் வீரண்ணா ஈட்டி வாள் எல்லாம் தயாருகட்டும் சுளிக்கு சுழல் கத்தி சித்தமாகட்டும்

கட்டபொம்மு:- ஏறுங்கள் மேல் மாடி என்ன இருமாப்பு நமக்கு வரவேற்பு அளிக்காமல் வாசர் கதவுகளை தாளிட்டு விட்டான் நல்லபாம்பை தூக்கி மாறில் போட்டு கொண்டான் நாடாளத் தெரியாத நாடோடிப் பயல்

[கட்டபொம்மு ஊமதுரை பாதர்வெள்ளை வீரண்ணா கருப்பண்ணா தானாதிபதிபிள்ளை கம்பளபடைகள் கட்டுடன் உள்ளே நுழைந்தது இவர்களை கண்டு ஜாக்கிஷன் எழுந்து பார்த்தான் உடனே]

கட்டபொம்மு: குற்ருலத்தில் சந்திக்கும்படி தகவல் அனுப்பி விட்டு சந்திக்காமல் தகவல் கொடுக்காமல் வந்த காரணம்?

ஜாக்கிஷன்:- சந்தர்ப்ப சூழ்நிலை அப்படி ஆனது அதிருக்கட்டும் பாஞ்சாலங் குறிச்சியில் கோட்டை கட்டியதும் பால் ஏறிவரை தடுத்து நிலங்களை பண்படுத்திய தும் யாரைக்கேட்டு செய்தாய்?

கட்டபொம்மு:- என் நாட்டில் கோட்டை கட்டவும் குளங்கள் வெட்டவும் காட்டை அழித்து மேட்டை தூற்று வயல்களுக்கு வளப்படுத்த அடுத்தவரை கேட்க்க வேண்டிய அவசியம்!

ஜாக்கிஷன்:- ஆளுவது ஆங்கிலேயர் என்பதால் அனுமதி பெற்றுதான் நீ அதை செய்து இருக்க வேண்டும் அல்லாமல் நீ கோட்டை கட்டியதும் படைகள் அமைத்து பாளயக்காரர்களை பயபடுத்தியதும் எங்களிடம் அனுமதி பெருமல் அல்லவா?

கட்டபொம்மு:- ஆண்டவன் இடத்தில் கூட கட்டபொம்மன் அனுமதி கோரி கைகட்டி நிற்க்க மாட்டான் ஆங்கிலேயர் இடத்திலா அனுமதி கேட்பான் என்பதை இன்னும் நீங்கள் அறியவில்லை போலும் பயந்த பாளயபட்டார்கள் இவைகளை சொல்லி இருப்பார்களே..........

ஜாக்கிஷன்:- யார் இடம் பேசுகிறோம் என்பதை உணர்ந்து பேசு கட்டபொம்மா!

கட்டபொம்மு:- நன்ருக உணர்வேன் எங்கோ கிடந்த நாடோடிகள் ஆட்டைமாட்டை ஓட்டி தோல்வியாபாரத்திற்கு துரைமுகத்தில் இடம் கேட்டு காட்டி கொடுக்கும்

கயவர்களை கையில் போட்டு நாட்டை கைபற்றிய நன்றி கெட்ட நயவஞ்சகர் இடத்தில் பேசுகிறோம் என்பதை............

ஜாக்கிஷன்:- கட்டபொம்மா எரிமலையில் மோதி கொள்கிறாய் இடி விழும் மரத்தை நோக்கி செல்கிறாய் கொந்தளிக்கும் கடலில் நீந்தி செல்கிறாய் பீரங்கி பிரயோகத்திற்குமுன் பிரசங்கம் செய்கிறாய் வேண்டாம் எங்கள் சட்டத்திற்கு கட்டு பட்டு நடந்து கொள்

கட்டபொம்மு:- உங்கள் சட்டம் எங்கள் நாட்டிற்கு ஏற்றது மல்ல ஏற்க்க கூடியது மல்ல உழைத்து உணவை உற்ப்பத்தி செய்து உண்டு வாழும் ஊக்கம் கொண்டவர்கள் நாங்கள் உத்தியோகம் என்று பட்டம் வைத்து உலகை ஏமாற்றி திரியும் ஊதாரி கூட்டம் நீங்கள் மரங்களை வெட்டி மாடுகளை வையித்து நெற்றி வியர்வை நிலத்தில் விழ பாடு படும் பாட்டாளி நாங்கள் பரங்கிகாய் போல் பழரசம் பாதங்கீர் சாப்பிட்டு கால் தரையில் படாமல் காரில் சுற்றும் காவாலிகள் நீங்கள் ஆகையால் நீங்கள் வகுத்த சட்டம் எங்களுக்கு ஏற்றது அல்ல உகந்ததும் அல்ல

ஜாக்கிஷன்:- உகந்ததா இல்லையா என்ற கேள்வி நீ கேட்க்க அதிகாரம் இல்லை உலகம் எல்லாம் கட்டியாள்வது ஆங்கிலேயர்கள் அதை அறிந்து நட

கட்டபொம்மு:- உலக மெல்லாம் கட்டியாளலாம் ஆனால் தமிழனை அடிமை படுத்தி ஆள தரணியில் யாராலும் முடியாது நடவாது

ஜாக்கிஷன்:- நடவாது முடியாது என்று ஏன் நரியைபோல் ஊளை இடுகிறாய் நீ எங்களுக்கு கப்பம் கட்டியே

ஆக வேண்டும் இல்லா விட்டால் கடுமையான தண்டனைக்கு ஆளாகுவாய் கட்டபொம்மா

கட்டபொம்மு:- கப்பம் உங்களுக்கு நாங்கள் கட்டவேண்டும் எதர்க்காக கப்பம்

ஜாக்கிஷன்:- எதிர்த்து பேசாதே எங்கள் ஆட்சியில் வாழ் கிருய் எங்களுக்கு அடங்கியே தீர வேண்டும்

கட்டபொம்மு:- முத்தெடுக்கும் கடல் கொண்ட நாடு முல்லை கொடிகள் படர்ந்து துள்ளி விளையாடும் புள்ளிமான் கள் நிறைந்த நாடு பவளம் விளைந்து பாவலர்கள் சூழ்ந்த நாடு வாணிபம் செய்யும் வகைகள் அரிந்த நாடு வந்தவரை வரவேற்கும் வளமிகுந்த தாய்நாடு குமரி முதல் இமயவரை எங்கள் கொடி பரந்து எல்லா நாட்டவரும் எதிர்பார்க்கும் கைதொழில் நிறைந்த நாடு சங்கம் வளர்த்த நாடு வங்க முதல் சென்று வென்று முரசு கொட்டிய நாடு இலங்கை முதல் எங்களுக்கு அடிபணிந்து இருந்த நாடு ஈரான் இராக்வரை எங்கள் படை சென்று வென்ற நாடு பாரத்திருநாடு பண்போடு வாழும் பைந்தமிழ் நாடு உலகம் தோன்றிய மட்டும் ஒருவருக்கும் தமிழன் அடங்கி வாழ்ந்தது இல்லை சரித்திரம் கண்ட சான்று இது உங்கள் சட்ட திட்டம் எங்கள் இடம் செல் லாது வெல்லாது எங்களை அடக்கி ஆள உங்களால் முடியாது உன்முடிவு என்ன என்பதை சொல்லுங் கள்

ஜாக்கிஷன்:- விந்திய மலைவீரன் வரை எங்கள் காலடியில் வீழ்ந்து மடிந்து இருக்கிருன் வீண் வேதாந்தம் பேசாதே வீரம்பேசி வீணுக மடிந்து போகாதே கப் பம் கட்டுவதாக கையொப்பம் இட்டு செல் நல்ல வனுக நாட்டில் வாழ்

கட்டபொம்மு:- கட்டபொம்மன் இடம் இதுவரை இப்படி கண்டிப்பாய் பேசியவர்கள் கத்திக்கு இறையாகாமல் தப்பியதே இல்லை கத்தரிக்காய்போல் உன்கழுத்தை நருக்கி விடலாம் ஆனால் இது முதல் முறை மன்னிக்கிறேன் (திரும்பி) தம்பி புரப்படுங்கள் இந்த போலிப்பயல் இடத்தில் இனி பேச வேண்டிய அவசியமே கிடையாது

[கட்பொம்மன் திரும்ப ஜாக்கிஷன் அவன் மடியை இழுக்க]

கட்டபொம்மன்:- கத்தி பிடிக்கத்தெரியாத வெள்ளரிக்காயே! என் இடையில் இருந்து கையையெடு இல்லாவிட்டால் ஈட்டிக்கு இரையாகி விடுவாய்

ஜாக்கிஷன்:- ம்....கதவுகளை சாத்துங்கள் கட்டபொம்மனை சுட்டுத்தள்ளுங்கள் எடுங்கள் துப்பாக்கிகளை திருப்புங்கள் பீரங்கியை தில்லு முல்லுகள் ஆடும் இந்த திருட்டு கூட்டத்தை கூண்டோடு சுட்டு சாம்பலாக்குங்கள் சாக்கடையில் தள்ளுங்கள் சண்டாளர்களை

ஊமதுரை:- ஆருயிரமயிலுக்கு அப்பால் இருந்துவந்து ஆளுகிறோம் என்று ஆணவம்கொண்ட அர்ப்பனே உன் அழிவு காலத்தின் அஸ்த்திவார முதல்படி அல்ல முடிவு இருதிப்போர்............எடுங்கள் வீரண்ணு வீசுங்கள் ஈட்டியை இந்த கொடியவர்களை கோடாரியால் கொத்தித்தள்ளுங்கள் வஞ்சகனை வாளுக்கு இரைகொடுங்கள் சிங்கத்தமிழர்களே செவ்வெளனிகாயை சீவி சீமைக்கு அனுப்புங்கள் வாசர் கதவுகளை உடைத்தெரியுங்கள் இரும்பு கதவுகளை இடித்தெரியுங்கள் பாதகன் வாழும் இடமெல்லாம் பிணக்களமாக்குங்கள் இந்த கயவன் கலெக்டர் மாளிகையை பெயர்த்தெரியுங்கள் கண்ட இடமெல்லாம்

வெள்ளையன் தலை உருளட்டும் வீணர்கள் மடிந்து போகட்டும் மரத்தமிழர்களை அடிமை படுத்த வந்த மடையர்கள் மண்டைகள் மண்ணிலே புரளட்டும் பீரங்கி வெடித்தாலும் பேரளயமானாலும் அஞ்சா தீர்கள் கெஞ்சினாலும் தஞ்சமென்றாலும் விட்டுவிடா தீர்கள் கட்டிவையுங்கள் கருணை காட்டாதீர்கள் ஏமாற்றுவான் ஏமாந்து விடாதீர்கள் நடக்கட்டும் போர்!............போர்!!............போர்!!!....................

[சண்டை நடந்தது உடனே கட்டபொம்மு ஊமதுரை படைகள் அனைவரும் வெளியேறி ஊர் திரும்பி விட்டனர் வெள்ளையர் பட்டாளம் சின்னாபின்னமானது சிதறியசிலர் பாதர்வெள்ளை தானாதிபதி இருவரையும் பிடித்துவிட்டனர் உடனே அவரை சென்னைக்கு அனுப்பிவிட்டனர் ஊர் திரும்பிய கட்டபொம்மு பாதர்வெள்ளை வராததுகண்டு தன் தம்பி ஊமதுரையிடம்........

## காட்சி 11. இடம்:- பாஞ்சாலங்குரிச்சி

[கட்டபொம்மு கோட்டை அனைவரும் இருக்க ஊமதுரையை பார்த்து]

கட்டபொம்மு:- தம்பி ஊமதுரை தளபதி பாதர்வெள்ளையும் தானாதிபதியும் அந்த வஞ்சகரிடம் சிக்கிவிட்டனர் வீணர்கள் விடமாட்டார்கள் படை எடுக்கலாம் சென்னைமீது. பாதர்வெள்ளையை விடுவிக்க வேண்டும் வீரண்ணா தயாராகட்டும்

ஊமதுரை:- அண்ணா வெள்ளைதேவனை அந்த வெள்ளையர்கள் ஒன்றும் செய்துவிடமுடியாது ஒருவாரம் ஓய்வு கொடுத்து பார்ப்போம் அதற்குள் வராவிட்டால் சென்னைமீது போர்.................தொடுப்போம்

வீரண்ணு:- ஆம் அதுவும் அற்புதமான ஆலோசனைதான்

கட்டபொம்மு:- சரி பார்க்கலாம் வந்ததும் விரைவில் வெள்ளை தேவனுக்கு திருமணம் செய்து முடிக்கவேண்டும்

**காட்சி 12. இடம்:- சென்னை துரைமாளிகை**

[பாதர்வெள்ளையை கைது செய்யப்பட்டு கொண்டு வந்து நிருத்த பாதர்வெள்ளையை பார்த்து]

துரை:- வீண் கொட்டமடித்து கட்டபொம்மனோடு சேர்ந்து வெள்ளையர்களை எதிர்க்க திட்டம்போட்ட வெள்ளை தேவன் நீதானே?

பாதர்வெள்ளை:- வீண் மிரட்டலுக்கு அஞ்சாத வெள்ளைத் தேவன் நான் தான். வீரத்தின் தாயகமான பாஞ் சாலங்குரிச்சி படைத்தளபதிபாதர்வெள்ளை பலிபீட மானாலும் பயந்தோடா பாதர்வெள்ளை நான் தான்.

துரை:- அழியப்போகும் நேரத்தில் அனல் தெரிக்கும் சொர்க் களா?

பாதர்வெள்ளை:- அழிவு எங்களுக்கா? உனக்கா? என்பதை சற்று ஆலோசித்துப்பார் பாதர்வெள்ளை போனால் அடுத்தது வீரண்ணு

துரை:- கசாப்பு கடைக்காரன் கையில் அகப்பட்ட ஆடு குர வன் வலையில் பட்ட நரி பராந்து இடம் அகப்பட்ட கோழிக்குஞ்சு உன் கொக்கரிப்பு கொஞ்சநேரத் தில் மடிந்து மண்ணாகி விடும் மமதை கொள்ளாதே மரியாதையாக பதில் சொல்.......................

பாதர்வெள்ளை:- மரணத்திற்கு அஞ்சிமானமிழக்கமாட்டான் இந்த மரத்தமிழன் மரணத்தை முத்தமிடுவோம் அக்ரம ஆங்கிலேயன் அழிவின் முதல்படி என்று

ஆனந்தப் படுவோம் நடக்கட்டும் உன் திட்டம் எது வானுலும்...........

துரை:- சொல்வதைகேள் சப்தம் போட்டு செத்து மடியாதே

பாதர்வெள்ளை:- சாகசம் வேண்டாம் என்றைக்கும் உனக்கு அஞ்சிவாழ போவது நாங்களல்ல சொகுசான வார்த்தை வேண்டாம் சுட்டுவிடு......................

துரை:- பட படக்காதே அமைதியாக பதில்சொல்லி இந்த அவனியில் அதிக நாள் வாழ போகிருயா? அல்லது வீணுக வீரம்பேசி வீழ்ந்து மடியபோகிருயா?

பாதர்வெள்ளை:- வீண் வார்த்தைகளை வளர்க்க வேண்டாம் இந்த வெள்ளைத்தேவன் வெள்ளையன் இடம் மன்னிப்பு கேட்பான் என்று மனப்பால் குடிக்காதே மாரிலே வாள் ஏந்தி மடியும் மரபை சேர்ந்தவன் நான்

துரை:- இந்த முறை உன்னை மன்னித்து அனுப்புகிறேன் இன்னும் சிறிது நாளையில் அழைப்புவரும் அந்த சமயம் ஓர் முடிவோடு அனைவரும் வாங்க

பாதர்வெள்ளை:- முடிவு அது முன்பே தீர்மாணித்து விட்டோம்

[பாதர்வெள்ளை பாஞ்சாலங்குரிச்சிபோக ராணி இடம் துரை இந்த விஷயமாய் ஆலோசிக்கிருர்கள் மீண்டும் பாதர்வெள்ளை ஊர் வந்தார்]

[இடம்:- பாஞ்சாலங்குரிச்சி கட்டபொம்மு ஊமதுரை மற்றும் அனைவரும் பாதர்வெள்ளை தானுதிபதி இருவரும் அகப்பட்டு இன்னும் வரவில்லையே என்று யோசிக்க]

கட்டபொம்மு:- தம்பி! பாதர்வெள்ளையும் தானுதிபதியும் தப்பி இருப்பார்களா என்று தான் வருந்த வேண்டிய விஷயம்

பாதர்வெள்ளை எப்படியோ தப்பி விடுவான் ஆனல் தானுதிபதியோ அப்படி இல்லை

ஊமதுரை:- இன்னும் சிறிது நேரத்தில் பாருங்கள்

[பாதர்வெள்ளை வர ஆனந்தமாய்]

கட்டபொம்மு:- சபாஷ்! பாதர்வெள்ளை என்ன நடந்தது அங்கே எங்கே அப்படியே சொல் பார்க்கலாம் அவைகளை

பாதர்வெள்ளை:- வெள்ளையன் கொஞ்சம் வீண் மிரட்டல்கள் செய்தான் சரியான சூடு கொடுத்தேன் சல சலப்பு காட்டினுன் இந்த நரி இதை கண்டு அஞ்சாது என்பதை ஆணித்தரமாக பதில் கொடுத்தேன் இவைகளை கேட்டு ஆங்கிலேயன் என்ன நினைத்தானே என்னமோ உடனே ஊருக்குப்போ மீண்டும் அழைப்பு வரும் அது சமயம் அனைவரும் ஓர் முடிவோடு வாருங்கள் என்ருன் இவைகள் தான் ஆமா? எப்படி...................

கட்டபொம்மு:- ஆனு தானுதிப்தி எங்கே?

பாதர்வெள்ளை:- தானுதிபதி வரவில்லையா அவரை நான் காணவே இல்லையே

ஊமதுரை:- அப்படியானுல் அந்த வெள்ளையன் ஏதோ சூதுகள் செய்வதற்கு தான் இந்த மர்மம் செய்து இருக்க வேண்டும் உன்னை என்ன கேட்டான் அதை சொல் பார்க்கலாம்

பாதர்வெள்ளை:- வெள்ளையர் கொட்டத்தை அடக்க திட்டம் போட்ட கட்டபொம்மன் தளபதி நீதானே என்ருன் ஆமா என்றேன் ஆவேசமாய் பேசினுன் அத்தனைக்கும் அழகான பதில் கொடுத்தேன் இத்தனைக்கும் என்னை எந்தவிதமான இம்சைகள் செய்யவில்லை இதற்கு என்னசெய்வது தானுதிபதியை இப்போது விசாரிக்கலாம் வீராப்புக்கு சரியான பதில்கொடுப்பார் தானுதிபதி,

கட்டபொம்மு:- சரி தானுதிபதி வரட்டும் பாதர்வெள்ளை உனக்கு இப்போதே திருமணம் நடக்க வேண்டும் அதை நாங்கள் கண்டு களிக்க வேண்டும் எதிரிபிடம் நாம் இருக்கும் நிலையில் என்ன நடக்கும் என்பதை யார் அறிய முடியும் நாளை காலைக்குள் திருமணம் நடக்க வேண்டும் அதை கண்டு நாம் களிக்க வேண்டும்

[மறுநாள் காலை பாதர்வெள்ளைக்கு திருமணம் நடந்தது அனைவரும் ஆரவாரமாய் இருக்க]

[இடம்:- சென்னை கவர்னர் மாளிகை அங்கு அனைவ நும் இருக்க தானுதிபதியை கொண்டு வந்து நிருத்த அவரை பார்த்து]

துரை:- அரசியல் நிபுணரும் அரிவின் சிகரமும் கணக்கில் கைதேர்ந்தவரான தானுதிபதி பிள்ளை நீ தானே

தானுதிபதி:- ஆம் அத்தனையிலும் திரம்பட செய்வேன்

துரை:- வெள்ளையரை எதிர்க்க திட்டம் வகுத்ததும் தாங்கள் தான் அல்லவா?

தானுதிபதி:- ஆம் விண்வம்பர் யாரா இருந்தாலும் கட்டபொம்மன் விழ்த்தியே ஆகுவான் வீரம் பேசியவன் யாரா இருந்தாலும் வெரட்டியே அடிப்பான் கட்டபொம்மன் இது நிச்சயம் இதில் அணுவு தவராத தானுதிபதி நான் தான் தாணியில் எவரும் எதிர்க்க முடியாத கடும் திட்டம் வகுத்து தரும் கணக்கன் தானுதிபதியும் நான் தான் கடும் சட்டம் இயற்றியதும் நான் தான்

துரை:- கட்டபொம்மன் இடத்தில் இருக்கும் ஆட்களில் ஆற்றல் படைத்தவர் இல்லையா அன்பு நிறைந்தவர் இல்லையா

தானுதிபதி:- உண்டு அக்ரம மாணவர்கள் இடம் அன்பும் ஆற்றலும் காட்டினல் அபாய மாக முடியும் என்பதை

அறிந்தே இத்தனைக்கும் அப்பார் பட்ட கருவியை கை யாள வேண்டி இருக்கிறது இதை தாங்களும் அறிந்து இருப்பீர்களே

துரை:- (சிரிப்பு) சபாஷ் ராஜதந்திரி உன்போல் யாருமே கிடையாது போகட்டும் நீர் இத்தனையும் தெரிந்தவர் ஏதோ நமக்குள் ஓர் சமரசம் ஏற்படுத்த ஒத்து உழைப்பீர் என்று எண்ணுகிறேன் என்னசொல்கிறீர் சொல் பார்க்கலாம் அதைத்தான்.......................

தானுதிபதி:- கப்பம் கட்ட வேண்டாம் கட்டபொம்மன் என்று சொல்லி விட்டால் என் கருத்தை வெளியிடலாம் இல்லா விட்டால் அதை அப்படியே மாற்றி கொள்ள வேண்டியது தான் கைகட்டி நிற்க வேண்டாம் என்று சொல்லி விட்டால் நமக்குள் சமரசம் சந்திப்பு சகலமும் ஏற்படும் இல்லா விட்டால் இது சாத்தி யம் இல்லை நடக்க கூடியது அல்ல நாடாள பிறந் தவன் என்பதை காட்ட கொடி நாட்டியே தீருவான் கட்டபொம்மன்

துரை:- சபாஷ்? சமார்த்திய மானவர் சாதுர்யம் ததும்பும் சமரசமான வார்த்தைகள் உம் இஷ்டம்போல் செய் வோம் உடனே நீர் ஊருக்கு செல்லலாம் ஆனல் சென்றதும் கட்டபொம்மன் இடம் இவைகளை சொல்லி உடனடியாக நமக்குள் சமரசம் ஏற்பட செய்ய வேண்டும் சந்திப்பு இருக்க வேண்டும்

தானுதிபதி:- அப்படியே செய்வோம் நான் சொன்ன திட்டங் கள் நிரைவேரும் வகையில் நடந்தால் நிச்சயம் இந்த கட்டம் நன்மையாகவே முடியும்...............

துரை:- சரி போய் இதற்கு உம் திரமை அத்தனையும் பயன் படுத்தும் அறிவின் பெட்டகம் தானுதிபதி

தென் நாட்டு அறிஞன் தானுதிபதி என்பதை உலகம் உள்ள மட்டும் வெள்ளையர் உள்ள மட்டும், உம்திரன் போற்றி புகழ்வார்கள் போய்வாரும் புதுமையான சந்துப்பு நடக்கட்டும்

[தானுதிபதி போக அவன் சென்றதும் காலன்துரை ராணி மற்றவரும் ஆலோசிக்க பல திட்டம் அதற்க்கு ஆலோசனை கூறிய காலன்துரை]

காலன்துரை:- கட்டபொம்மனை வெல்வது என்றால் நேரடியாக எதை செய்தாலும் முடியாது அவனை வர வழைத்து புகழ வேண்டும் பிறகு அவன் வார்த்தைகளில் இருந்து பல உண்மைகளை அறிய வேண்டும் அதன் பிறகு அவனை அழிக்க திட்டம் வகுக்க வேண்டும் தீமையை தீமையால் தான் அழிக்க வேண்டும் எண்ணை டாங்கில் தீபற்றி கொண்டால் மண்ணை அள்ளி போட வேண்டுமோ? அல்லது தண்ணீரை ஊற்றினல் அது அதிகமாக சுழல் விட்டெரியும் அதுபோலவே கவலையால் மெலிந்து கண்ணீர் விடும் பலரை பன்னீரால் பதபடுத்த முடியாது தந்திரமாய் பல காரணம் காட்டி சாந்திபெற சில வழிகளை கூறி வென்னீரை காட்டி கண்ணீரை கழுவ சொன்னல் கருத்து வேறு பக்கம் திரும்பி விடும் கவலை மாரி விடும் இதை போல் கட்டபொம்மனை வர வழைத்து கையில் மாலையும் சன்மானம் பலவும் செய்தால் சமார்த்தியமாக அவனை சாம்பலாக்கி விடலாம் சாம் ராஜ்யம் நமக்கு சொந்தம் என்பதற்க்கு கட்ட பொம்மன் தான் காரணம் என்றும் கூறலாம்

ராணி:- அப்படியே அவனுக்கு ஓர் மகசர் அனுப்புங்கள் மமதையோடு வரட்டும் மடையன் மனதை மாற்றி பார்க்கலாம்

[இடம்:- பாஞ்சாலங்குரிச்சி பாதர் வெள்ளை திருமணம் முடிந்து இருக்க அனைவரும் தானுதிபதி வரவில்லை என்பதால் க வ லை ப டு ம் சமயம் ஆனந்தமாக சிரிப்புடன்]

தானுதிபதி.- ராமநாதபுரம் ஜாகிஷன் மாளிகையை எனக்கே ரிஸ்வர்ட் பண்ணி இருந்தீங்களா? இல்லை ஓய்வு எடுக்க உகந்த இடம் அப்படின்னு எண்ணங் கொண்டு செய்தீர்களா?

கட்டபொம்மு:- தானுதிபதி என்ன நடந்தது அங்கே ஏது வெள்ளையன் நம்மிடம் பேசிய வீரமெல்லாம் மரந்து போய் விட்டான் கைவிட்ட காரணம் என்ன?

தானுதிபதி:- தகுதி, திறமை: அறிவு, ஆற்றல், இத்தனையும் கண்டால் யார் தான் செய்ய மாட்டார்கள் என் திட் டத்தை காட்டினுல் வெள்ளையன் என்ன எமன் கண்டால் கூட அவன் கணக்கு நிர் வாகத்தை நம்ப கையிலே ஒப்படைத்து ஓடி விட மாட்டானு? ஆமா அது இருக்கட்டும் எங்கே பாதர்வெள்ளை என்ன எங்கும் ஒரே தோரணம் தொங்கும் அமக் களம் (பாதர்வெள்ளை வர)

பாதர்வெள்ளை:- பிள்ளை எப்போது வந்தது

தானுதிபதி:- என்னை ஒப்படைத்து எல்லோரும் தப்பி விட் டீர்கள் மணமகன் மங்களகரமாக வாழக்கடவது வழக்கபடி எனக்கு

பாதர்வெள்ளை:- வருகிறது (சிரிப்பு) ஆமா நான் வந்தது தெரி யுமா உங்களுக்கு

தானுதிபதி:- தெரியாதே? நீ எப்போது வந்தாய்

பாதர்வெள்ளை:- வந்து வாரம் ஒண்ணு ஆகுது அதிருக்கட்டும் என்ன முடிவு சொன்னுன்

தானுதிபதி:- முடியாட்சி எங்கள் இடம் செல்லாது என்று சொன்னேன் கொஞ்சநேரம் குமுறும் எரிமலை யானுன் மறுபடி மனித இதயம் படைத்தவனுய் மாறி விட்டான் மக்கள் ஆட்சி கோரும் உங்கள் அனை வருக்கும் விரைவில் அழைப்பு வரும் வந்து சேருங் கள் நமக்குள் சமரசம் என்ருன் சாத்யமானுல் விரை வில் சந்திப்போம் என்றேன் சரி போகலாம் என்ருன் புரப்பட்டேன் மனமொடிந்து மீண்டும் மகிழ்ச்சி கண்டு வந்தேன் வந்ததும் மணமக்களை கண்டேன் அளவிலா ஆனந்தம் கொண்டேன்........(சிரிப்பு)

பாதர்வெள்ளை:- சபாஷ்? எங்கே அண்ணு!

தானுதிபதி:- நாம் பேசி கொண்டு இருக்கும் சமயம் எழுந்து சென்ருர் (திரும்பி பார்க்க கட்டபொம்மு வருதல்) ம்....இதோ வருகிருர் (இருவரும் புன் சிரிப்பு)

கட்டபொம்மு:- என்ன பாதர்வெள்ளை ஒரே ஆனந்தம் உலகை மறந்து பேசும் மகிழ்ச்சி என்ன?

தானுதிபதி:- மணிமுடி தரித்த மன்னவன் நம் இடம் மண்டி இட மனம் வந்ததால் மகிழ்ச்சி பெருகாமல் கவ லைக்கோ ஆத்திரத்திற்கோ இடமேது ஆமா எனக்கு திருமணம் எப்போது

கட்டபொம்மு:- இப்போதே செய்யலாம்....ஆனுல்

பாதர்வெள்ளை:- ஆனுல் என்ன அண்ணு?

கட்டபொம்மு:- கோட்டை நெல் அத்தனையும் குருது நெல்கள் யாவும் முடிந்து விட்டது

தானுதிபதி:- கும்பினியார் நெல்களை எடுத்து கொண்டால் பிறகு கொடுத்து விடுகிறேம்

கட்டபொம்மு:- அவர்கள் கொடுக்க மாட்டார்கள்

தானுதிபதி:- கொடுத்தால் பார்ப்போம் இல்லா விட்டால் கோட்டைகளை உடைத்தெடுப்போம்

கட்டபொம்மு:- கொடிய பாவத்தை நாமே செய்வதா?

தானுதிபதி:- உண்மையை கூறி நேர்மையாக கேட்போம் இணங்கினுல் பணிந்து எடுப்போம் மறுத்தால் மண்டைகளை உருட்டி கோட்டை நெல்களை கொண்டு வருவோம் இது பாவம் ஆகாது

கட்டபொம்மு:- என்ன இருந்தாலும் இது நல்ல தல்ல

(இந்த சமயம் ஊமதுரை வந்து)

ஊமதுரை:- என்ன பாதர்வெள்ளை இது. அண்ணு இப்படி கவலையுடன் இருக்கிருர் காரணம்?

தானுதிபதி:- எனக்கு திருமணம் செய்ய நெல் இல்லை என்ருர் கும்பினியார் கோட்டையில் இருந்து எடுக்கலாம் பிறகு கொடுக்கலாம் என்றேன் அதற்க்காக இந்த கவலை எற்பட்டது அண்ணுவுக்கு.....................

ஊமதுரை:- (சிரிப்பு) இதற்க்கா அண்ணு நானும் பாதர்வெள்ளையும் சென்று நெல் கொண்டு வருகிருேம் நேர்மையோடு கேட்டே வாங்குவோம் கவலை பட வேண்டாம் தாங்கள் விடை கொடுங்கள் விரைவில் வருகிருேம் தானுதிபதிக்கும் நாம் தானே செய்ய வேண்டும்

கட்டபொம்மு:- நாம் தான் செய்ய வேண்டும் ஆனுல் அன்னியனுக்கு நாம் அடங்கி வாழக் கூடாது என்று வழக்காடும் போது நாம் தாய் நாட்டு மக்களை நாம் கொடுமை படுத்த கூடாது என்பது தான் என் கருத்து

ஊமதுரை:- அண்ணு இல்லாதவரை இம்சிப்பது தவருதான் உண்டானவர் இடம் கெஞ்சி கேட்டால் மிஞ்சி விடு

வார்கள் அதனுல் கொஞ்சம் சச்சரவு ஏற்படும் பாதகம் இல்லே பார்ப்போம் எது வானுலும் இருதியில் புரப்படுங்கள் அண்ணு சென்று வருகிருேம் சீக்கிரமாக

[ஊமதுரை பாதர்வெள்ளே தானுதிபதி அனேவரும் செல்ல கட்டபொம்மன் யோசனே யோடு இருக்க]

[இடம் சென்னே கவர்னர் மாளிகை அனேவரும் இருக்க காலன் துரை சிரிப்புடன் வந்து]

துரை:- ஆமா? கட்டபொம்மனே இங்கு வரும்படி கடிதம் அனுப்பலாம் பிறகு மற்றவை

ராணி:- உடனே ஆள் அனுப்புங்கள் மற்றவை பிறகு பேசலாம் அன்றே

[இடம்:- கும்பினியார் இல்லம் அங்கு சென்று ஊமதுரை தானுதிபதி பாதர் வெள்ளே மற்றும் படைகளோடு சேர்ந்து நெல் கோட்டைகளே அள்ள அதை கண்ட கும்பினியார் மனம் கொதித்து அலர இவைகளே கண்ட பாண்டிய தேவன் பதரி வந்து]

பாண்டியதேவன்:- வெள்ளேத்தேவனும் ஊமதுரையுமா இந்த விபரீதமான காரியம் செய்வது................

பாதர்வெள்ளே:- விபரீதமல்ல வேண்டியதை எடுத்து கொண்டோம் விரைவில் திருப்பி தருவோம்

ஊமதுரை:- பாண்டியதேவா பயப்படாதே அந்த பஞ்சை பயல் வெள்ளேயனுக்கு அஞ்சி நீங்கள் அனேவரும்

கப்பம் கட்டும்போது நாங்கள் எடுப்பதில் என்ன தவரு நீயே பதில் சொல் இது குற்றமா?

பாண்டியதேவன்:- அந்த அக்ரம வெள்ளையன் ஏதோ விஞ் ஞானத்தை கண்டு பிடித்து வீணுக இந்தியாவை அடிமை படுத்தி விட்டான் அவனை ஒழிக்காமல் இங்கு வாழும் மக்களை இப்படி இம்சை செய்தால் எப்படி

தாணுதிபதி:- அந்த விஞ்ஞானியை விரட்ட அஞ்ஞானம் பாடி ஞல் முடியாது அவன் அடக்கு முரையை ஒழிக்க அனைவரும் சேருங்கள் என்று தானே அப்போதே ஆயிரமுரை அறிவித்தோம் வெள்ளையனை விரட்ட நாங்கள் பாடு பட்டால் ஒரு கூட்டம் காட்டி கொடுக் கவோ காசு சேர்க்கவோ பாடு படுகிறது வீண் வார்த்தை ஏன் என்ன சொல்கிருய்

பாண்டியதேவர்:- இதை நான் தடுக்கிறேன் நிறுத்துங்கள்

ஊமதுரை:- பாண்டியதேவா பார்த்து பேசு யார் இடம் இதை கூறுகிருேம் என்பதை அறிந்து கூறு

பாண்டியதேவன்:- உலகம் எதிற்க்க முடியாத ஊமதுரை இடம் கூறுகிறேன் படைக்கஞ்சாத பாதர்வெள்ளை இடம் கூறுகிறேன் தரணியை எதிற்க்க தந்திரமாக திட்டம் வகுத்து தரும் தாணுதிபதி இடம் கூறுகிறேன் இதை நிறுத்துங்கள்

ஊமதுரை:- பாண்டியதேவா படைக்கு முன் கூறும் பதில் இப்படி அல்ல வாளுடன் வந்து சொல்

பாண்டியதேவன்:- வாள் எடுத்தே பதில் கொடுக்கிறேன்

தாணுதிபதி:- போர்க்களத்தில் ஒப்பாரியா? நடக்கட்டும்

[பாண்டியதேவன் வர பாதர்வெள்ளை சண்டை செய்ய பாண்டியதேவனை கொன்று வீடுதிரும்ப ஊமதுரை மற்ற வரும், இந்த சமயம் பாண்டியதேவன் மனைவி கேட்டு கணவன் இறந்தான் என்றதும் அலரி சின்னமக்காலே பெரிய மக்காலே இடம் போக]

[இடம்:- சின்னமக்காலே பெரியமக்காலே இல்லம் அங்கு அலரி ஓடிய பாண்டியதேவன் மனைவி]

மனைவி:- மக்காலே என்மனம் பதருதே என் கணவர் இறந்து விட்டாரே என்ன செய்வேன் மக்காலே இதற்க்கு நான் எங்குபோய் கூக்குரல் இடுவேன் மக்காலே அய்யோ?

சின்னமக்காலே:- ஆண்டாண்டு அழுதாலும் மாண்டவர் வர மாட்டார் நான் சொல்வதை கேள் நீ சென்று உன் கணவனுக்கு உன் கடமைகளைசெய் இதைபற்றிய வைகளை நான் கவனிக்கிறேன் நீ போ...............

[இடம் கட்டபொம்மன் இல்லம் பாஞ் சாலங்குரிச்சியில் பலபேர்களும் ஊமதுரை பாதர்வெள்ளையும் தானுதிபதியும் வர இவர் களை கண்டதும்]

கட்டபொம்மன்:- தம்பி கும்பனியார்கள் சண்டையிடாமலே சகலமும் செய்து விட்டார்களா?

தானுதிபதி:- அதான் இல்லை இந்த காலத்திலே ஆடிகரக்குர மாட்டை ஆடித்தான் கரக்கவேண்டும் அது .இருக் கட்டும் எட்டு நாளைக்குள் கடிதம்வரும் கண்டதும் அனைவரும் வரவேண்டும் வாசிப்பு பத்திரம் வாசித் தளிக்கப்படும் என்றெல்லாம் கூறினனே அந்ததுரை

[இந்த சமயம் குதிரையில் இருந்து வேகமாய் வந்த]

சிப்பாய்:- ராணி இதை தங்களிடம் கொடுத்து வரும்படி கூறி ஞர்கள்.........................(வாங்கிக்கொண்டே)

கட்டபொம்மு:- சரி வாங்கிக்கொண்டோம் என்று சொல்.... போ.........(சேவகன்போக).........(கட்டபொம்மன் திரும்பி சிரித்துக்கொண்டே) பிள்ளை கடிதத்தைப் பிரித்து படித்துப்பாருங்கள் எப்படி என்ன எழுதி இருக்கிருன்.

[பிள்ளை கடிதம் பிரித்து விபரம் படிக்க]

அன்புள்ள கட்டபொம்மன் ஊமதுரைக்கு.... ராணியும் காலன் துரையும் உன்னைக்கண்டுபேச வேண்டும் என்று ஆகரம்கொண்டு வரைந்த கடிதம் இதைக்கண்டதும் புரப்பட்டு வருவீர்கள் என்று எதிர்பார்கிறேன் நமக்கு சமாதானம் ஏற்பட வேண்டும் என்றும் கூறிக்கொள்கிறேன்.....................

இப்படிக்கு:- **ராணி.**

[இதைக்கேட்டதும்]

கட்டபொம்மன்:- நாகப்பாம்பு...........புற்றின்மேல் உட்கார் உன்னைக்கடிக்கமாட்டேன் என்கிறது நதியில் கிடக்கும் முதலை அஞ்சாமல் இரங்கு உன்காலை முத்தமிடுவேன் என்கிறது மலைக்காட்டிலே வாழும் நரி இருட்டிலேகண்டமனிதனை கடிக்கமாட்டேன் கவலையற்று உரங்கு என்கிறது எப்படி நம்பமுடியும்........

தாஞதிபதி:- அந்த வேஷத்தோடு செல்வோம்

பாதர்வெள்ளை:- எப்படி அந்த வேஷம்

தாஞதிபதி:- பாம்பிற்கு மகுடி, முதலைக்கு சுளிக்கி, நரிக்கு வலை இந்த வகையோடு நாமும்சென்ருல்

ஊமதுரை:- இந்த தந்திரம் நடக்கக்கூடியது அல்ல

தானுதிபதி:- ஏன் நம்மை அவ்வளவு அபலே என்று எண்ணி இருக்கமாட்டான் வெள்ளேயன்

கட்டபொம்மு:- நம்படைகள் தயாராகட்டும்

பாதர்வெள்ளே:- நாளேதானே நம்மை வரும்படி எழுதி இருக்கிருன் அதனுல் இன்றே தானுதிபதி கல்யாணத்தையும் செய்து முடித்து விட்டால் நலமாக இருக்கும்

ஊமதுரை:- ஆம் அண்ணு அதுதான் சரி அப்படியே செய்யுங்கள் மற்றவைகளே நாங்கள் கவனிக்கிருேம்

கட்டபொம்மன்:- அப்படியே நடக்கட்டும் பிள்ளே திருமணம் பிரமாண்டமாகவே நடக்கட்டும்

[இந்த சமயம் சின்னமக்காலே எழுதிய தபாலே கண்ட]

காலன்துரை:- நரிக்கு இடம் கொடுத்தால் ஆட்டுமந்தையில் புகுந்துவிடும் என்பதை அப்படியே காட்டுகிருன் பாம்பை தடவி கொடுத்தால் நேரம் எதிர்பார்த்தே தீரும் என்பது சரிதான் அயோக்கியன் செவிக்கு அறிவாலி குறல் அர்த்தம் மற்றதாக தான் தோன்றும் திருட்டு பயல்களுக்கு வீரனின் தீரம் தெரியாது தான் நாம் சொல்லி அனுப்பிய தென்ன? செய்தது என்ன?

ராணி:- என்ன செய்து இருகிருன்?

காலன்துரை:- கும்பினியார் கோட்டைகளே கொள்ளே யடித்து இருக்கிருன் பாண்டிய தேவனே கொன்று குவித்து விட்டார்கள் இந்த கொடியவர்கள் இந்த கூட்டத்தை கூண்டோடு கொளுத்தி சாம்பலாக்க வேண்டும் சுண்டைக்காய்கள் சண்டைக்கு வருகிறது

எறும்புகள் எதிர்த்து போர் செய்கிறது இதற்க்கெல்லாம் காரணம் நாம் தான் இந்த சுட்டகரிகளுக்கு நம் சட்டம் எப்படி தெரியும்?

ராணி:- இருக்கட்டும் எழுதிய கடிதம் கண்டதும் அவசியம் வருவான் வரவேற்பு அளித்து சில வழிகளை கூறி அனுப்புவோம் பிறகு பார்ப்போம்

[இந்த சமயம் தான் கட்டபொம்மு ஊமதுரை அனைவரும் வந்தார்கள் இவர்களை கண்டதும் எழுந்து]

ராணி:- வருக வருக வண்டமிழ் நாட்டு வீரர்களே வருக தென்னாட்டு தீ ர ர் க ளே வருக அடிமை என்ற சொல்லை அகற்ற பிறந்த அற்ப்புத ஜோதியே வருக வருக அமருக

[கட்டபொம்மு ஊமதுரை பாதர் வெள்ளை தானதிபதிபடைகள் அனைத்தும் அமர அது சமயம் ப ன் னீ ர் தெளிக்க வாத்யம் முழங்கவகையான வாண வெடிகள் வெடிக்க இவைகளை கண்டு மயங்கிட வில்லை கட்டபொம்மன் படைகள் கவனமுடன் இருக்க கையில் முத்து மாலை எடுத்து சிரிப்போடு]

ராணி:- இந்த முத்து மாலையை வீரமும் தீரமும் கெம்பீரமும் கொண்ட கட்டபொம்மு அவர்களுக்கு ஆங்கிலேயர் சார்பிலும் ஆட்சியின் சார்பிலும் பரிசளிக்கிறேன்

(கைதட்ட ஆனால் வெள்ளையர் மட்டும் தான் கைதட்டியது)

ஊமதுரை:- (எழுந்து) இந்த முத்து எங்கள் துரை முகத்தில் எடுக்க கூடியது தான் இதை எங்களுக்கு பரிசளிப்பது எங்களை அடிமை படுத்துவது என்று தான் அர்த்தம்

காலன்துரை:- இல்லை எந்த நாட்டில் உண்டானதாக இருந்தாலும் உயர்ந்த சாமான்களை பரி சளித்தால் அது உண்மையில் நன்மை என்று தான் கருதவேண்டும் நாணயமானவர்கள்

ஊமதுரை:- நாவை அடக்கியே பேசு நாணயமற்ற நாதாரி நீங்கள் நெஞ்சிரக்கம் அற்ற வஞ்சகர் நீங்கள் உங்கள் நீண்டநாள் சரித்திரம் எங்களுக்கு நன்ருக தெரியும் செய்கையில் தான் சேஷ்ட்டை என்ருல் பேச்சிலும் பித்தலாட்டம்

காலன்துரை:- தத்தாரியாக உளராதே

ஊமதுரை:- உரை வாளை எடுக்கும்படி செய்யாதே

கட்டபொம்மு:- எங்களை அழைத்த ராணி இனி தன் அபிப்பிராயத்தை தெரிவிக்கலாம் [உடனே எழுந்து]

ராணி:- அன்புள்ள வீரர்களே ஆங்கிலேயரை சிலர் அனியாயக்காரர்கள் என்கிருர்கள் இது அர்த்த மற்ற செய்தி அமேரிக்கா முதல் ஆசியா எல்லாம் ஆண்டவர்கள் ஆங்கிலேயர்களே இவர்களை எதிர்க்கிருர்கள் சிலர் இதன் காரணம் வெள்ளையர்களை நன்ருக புரிந்து கொள்ளாதது தான் பலவித கருவிகளை கண்டு பிடித்து விஞ்ஞான முறையில் நாட்டு மக்களை விவேக மாக்கி தந்தது வெள்ளையர்களே இதை சரியாக புரிந்து கொள்ளாதவர்கள் பலர் இதை செய்கின்றனர் நீங்களும் இதை அறிந்து எங்களை ஆதரிக்க வேண்டுமென்று கூறி முடிக்கிறேன்

கட்டபொம்மு:- திரமையை போற்றுவோம் தீமையை அகற்றுவோம் வீரத்தை மெச்சுவோம் வீராப்பை வீழ்த்துவோம் குணத்தை போற்றுவோம் கொடுமையை அகற்றுவோம் கருவியை கண்டுபிடித்து தந்தவரை கரம் கூப்பி தொழுவோம் க ட் டி ய ா ள நினைப்போரை வெட்டி வீழ்த்துவோம் இது என்றைக்கும் தமிழ் நாட்டில் ஏற்க்கும் பண்பும் பகுத்தறிவும் உங்களிடம் நாங்கள் சமரசமாக வாழ வேண்டுமானுல் முதலில் ராமநாதபுரம் கலெக்டர் ஜாகிஷன் துரையை மாற்ற வேண்டும் அவர் எங்களை ஏமாற்றியதால் அதற்கு பரிகாரம் தேடியே ஆகவேண்டும்

ராணி:- அப்படியே இன்னும் ஒருவாரத்தில் மாற்றி உங்களுக்கு தபால் எழுதுகிறேம் எப்போதும் நாம் உரவோடு வாழவேண்டும் இதுவேபோதும்

கட்டபொம்மு:- உலகம்போர வேகம் எதையும் திட்டவட்டமாக கூரிவிட முடியாது ஆகையால் பார்க்கலாம் நாங்கள் சென்று வருகிறேம்,

[அனைவரும் எழுந்துபோக ஆத்திரப்பட்டவனுய்]

காலன்துரை:- அனல் தெரிக்கும் சொற்க்கள் அடக்கமில்லா ஆவேசம் சட்டம் தெரியாத மட்டிப்பயலை க ட் டியிருக்க வே ண்டும் இவனை கழுகு மரத்தில் தொங்கவிட்டு கண்டவர் வியக்கச்செய்ய வேண்டும் காக்கையும் கு ரு வி க ளு ம் இவன் அங்கத்தை பங்குபோட்டுக்கொள்ள பார்த்து ரசிக்கவேண்டும் கற்ப்பாரையை சுமக்க வைத்து கண்டு சிரிக்கவேண்டும் கயவன் கர்ச்சனை செய்கிறுன்

ராணி:- நாய் குலைத்தால் நரிக்கா வாய் வலிக்கபோகிறது பார்ப்போம் கப்பம் கட்டாவிட்டால் அனுவணுவாக

சிதைக்கப்படுவான் என்பதை அப்போது புரிந்துக் கொள்வான் மடப்பயல் மண்டைகொர்வம் பிடித்து மதயானைபோல் துடிக்குறுன் சமயம் வரும்போது சரியாக சிக்கிகொள்வான் சாதுர்யமாகபேசி பார்ப் போம் இல்லாவிட்டால் நம்பீரங்கி அவன்கோட்டை களையும் படைகளையும் கொளுத்தி விடலாம் கூண்டு கிளியை கொல்லவா முடியாது

[இடம்:- பாஞ்சாலங்குரிச்சி கட்ட பொம்மன் கோட்டை அங்கே அனை வரும் வந்து சேர்ந்தனர் உடனே]

கட்டபொம்மன்:- பாதர்வெள்ளை ராணியின் வரவேற்ப்பில் ஏதோ மர்மம் இருக்கிறது அவர்கள் பேச்சிகளில் இருந்து நம்மை சதி செய்ய வேண்டும் என்று சில திட்டங்கள் தீட்டி இருக்கிருர்கள் என்று தெறிகிறது ஆனல் நாம் சற்று கவனிப்போடு இருக்க வேண் டும் பலவிதமான ரூபத்தில் நமக்கு தீங்கு செய்ய லாம்

பாதர்வெள்ளை:- வெள்ளையர்கள் விரட்டபட வேண்டியவர்கள் என்பதை முதலில் நாம் எடுத்து காட்டி விட்டோம் இனி எப்படி தந்திரம் செய்தாலும் முடியாது

ஊமதுரை:- உலகம் அழியும்வரை இந்தியா யாருக்கும் அடிமை பட்டு வாழாது என்பதை நாமே காட்டினேம் நாம் மடிந்து போனலும் இனி நம் போன்ற ஆயிர வீரர் கள் தமிழ் நாட்டிலே தோன்றுவார் எத்தனையோ மகாத்மாக்கள் இந்தியாவில் ஏற்படுவார்கள் அவர் களா லாவது இவர்களை விரட்ட படுவார்கள் பார்க் கலாம் நாம் பார்க்கா விட்டாலும் நம் நாடு வாழும்

போது தமிழ் நாட்டான் தலைவணங்க மாட்டான் என்பதை எடுத்து காட்டியது கட்டபொம்மன் என்பதை யாவது கூறுவார்கள் நம்மவர்கள்

தானுதிபதி:- யுகம் மாரினாலும் மனிதவர்க்கம் மடிந்தாலும் மண்டி இடாது மார் புயர்த்தி வாழ்ந்த மரத்தமிழன் கட்டபொம்மன் என்பதை மரக்க மாட்டார்கள் ஒவ்வொரு இந்தியனும் ஒரு சொட்டு ரத்தம் இருக்கும் வரை வெள்ளையனை விரட்டி உயிர் விடுவான் இது நம்மால் ஏற்ப்படும் முதல் போர் முரசு................

கட்டபொம்மு:- தமிழ் நாடு என்றும் அன்னியனுக்கு அடி பணிந்து வாழாது என்பதை நாமே காட்டவேண்டும் வெள்ளையர்கள் பலவேலைகளை காட்டி ஆள பார்க்கிருன் இருதியில் யாருல் நாட்டில் நுழைந்தானே அவனுலேயே விரட்ட படுவான் வஞ்சகர்கள் கொஞ்சு மொழியால் கொடுமைகள் செய்ய திட்டம் இட்டு இருப்பது நன்ருக தெறிகிறது இவர்கள் இடம் அன்பு காட்டுவது அக்கினியில் இரங்குவதுபோல் தான்

[இடம்:- பாஞ்சாலங்குரிச்சி அங்கு ராணி அனுப்பிய கடிதத்தை படிக்க ஆத்திரமாய்]

கட்டபொம்மு:- எதை எடுத்தாலும் ஏமாற்றும் வித்தைகள் எத்தர்கள் நம்மை ஏமாளிகள் என்று எண்ணி விட்டார்கள் இதற்க்கு இன்றே இருதி முடிவு சரியான பாடம் பட்டம் கட்டி கொண்டு நம்மை பஞ்சைகளாக்க திட்டமிடுகிருன் திருட்டு பயல் இவனை துரத்தி விட்டுத்தான் மறுவேலைகள் தயாராகட்டும் படைகள் தத்தாரிகள் தலை தரையிலே புரண்டால் தான் தமிழ் நாட்டை விட்டு செல்வார்கள்......ம்....சலோ போர்

ஊமதுரை:- தூங்கும் சமயம் படை எடுக்கும் துன்மார்க்கர் கள் அடிமை படுத்தி ஆள ஆசைப்பட்டு அவர்களை கொடுமை புரியும் குதர்க்கர் கூட்டம் வலிமை அறி யாது வலிய வம்புக்கு வருகிருன் வம்பன் இவனை எப்படியும் இந்த முறை எல்லையில் இருந்து விரட்ட வேண்டும் அல்லது இந்த சிறு நரிகள் கூடாரமான சென்னை சென்று சின்ன பின்னமாக்கி கடல் மார்க் கம் வந்த வரை வழி காட்டி அனுப்பி விடலாம்

(புரப்படுங்கள்)

பாதர்வெள்ளை:- திருமணம் நடந்து எனக்கு வாரம் ஒன்று ஆகவில்லை ஆனல் இந்த வஞ்சகரை என்வாளுக்கு இரையாக்கி விட்டுதான் மறுவேலை மமதை கொண்ட மடையர்கள் மண்டை மண்ணிலே புரளவேண்டும் அல்லது நாம் மாண்டு மடிந்து மண்ணோடு மண் ணாகி விடவேண்டும் மானிலம் புகழ இந்த மதயானை களை தரையிலே வீழ்த்த வேண்டும் அல்லது நாம் மாரிலே வாள் ஏந்தி மடிய வேண்டும் இந்த நயவஞ் சக குள்ளநரி கூட்டம் கூண்டோடு கொளுத்தி சாம் பலாக்கப் படவேண்டும் அல்லது குலை களத்தில் நாம் மடிந்துபோக வேண்டும் சரி எல்லாம் தயாரா கட்டும் நான் மனைவி இடம் சென்று விடை பெற்று உடனே வருகிறேன் [உடனே வீடு செல்ல]

[இடம்:- சென்னை ராணி மாளிகை காலன்துரையும் மற்றும் பலரும் பீரங்கிசகிதம் புரப்பட்டு கட்டபொம் மன் இடம் கப்பம் கட்டுவதாக கை யொப்பம் வாங்க புறப்படுதல் அவர் களை பார்த்து]

ராணி:- ஆங்கிலேயரை இதுவரையில் எதிர்த்தவர் யாருமே கிடையாது எந்த நாட்டிலும் கடலில் செல்லும் கப்பலுக்கு கூட நம்மிடம் கப்பம் கட்டி செல்கிறார்கள் அப்படி இருக்க இந்த நன்றி கெட்ட நாய்கள் ஊளை இடுகிறது ஊதாரித்தனமாக? உலகம் நம்மை கண்டு நடுங்குகிறது இந்த ஆயுத பலம் அற்ற அபலைகள் நம்மை எதிர்க்கிறது ஏமாளிகள் கோமாளித்தனமாக குலைக்கிறது அந்த கொடியவர்களை நம் குண்டுக்கு இறையாக்கி வாங்கள்

காலன்:- இந்த காலன்துரை இதுவரையில் கால் எடுத்து வைத்தால் காரியம் முடியாமல் திரும்பியதே இல்லை இந்த கபோதி நாய்கள் கப்பம் கட்ட மறுத்தால் இவர்கள் கோட்டைகள் இடியில் அகப்பட்ட ஈச்சங்காடு ஆகிவிடும் அந்த துள்ளி விளையாடும் புள்ளிமான் இந்த காலன்துரை கன்னியில் சிக்கி கால் முறிவது தின்னம் ஈட்டிகளும் வாள்களும் பரிக்கபடும் அந்த கூட்டத்தின் இதயத்தில் குண்டுகள் பாச்சபடும் குவலயம் எல்லாம் கட்டியாளும் கொற்றவன் வெள்ளையன் என்று மக்களை குதுகளிக்க செய்யலாம் கொண்டாட சொல்லி ஒரு கூட்டத்தை வளர்க்கலாம் இவைகள் தான் மிக முக்கியம் வறுகிறோம்

[காலன்துரையும் மற்றவரும் படைகள் சூழ போகுதல் ஏராளமான பீரங்கி குண்டுகள் துப்பாக்கி ஏந்தி செல்லுதல் அந்த சமயம் படைகளை பார்த்து]

காலன்:- வெள்ளையர் படைகளை இதுவரையில் விரட்டியவர்கள் யாருமே இல்லை நம் சொல்லை தள்ளி போட்டவர் தரணியில் யாருமே இல்லை இந்த ஒரு

சிறு கூட்டம் நம்மை சீறுகிறது சிதரடிக்க திட்டம் வகுக்கிறது அந்த அடக்கம் இல்லாத அயோக்கி யரை அடியோடு ஒழித்தே தீரவேண்டும் புரப்படுங் கள் பாஞ்சாலை நோக்கி

[பாதர்வெள்ளை தன் மனைவி இடம் தான் போருக்குபோக தாயாராக வேண் டும் என்றும் இந்த சமயம் எனக்கு விடை கொடு என்றும் கேட்கிருன் இதை கேட்டு]

பாதர்வெள்ளை:- மானிலத்தில் மனிதனுக்கும் மனிதனுக பிறந்த எவருக்கும் தாய் தந்தையரை விட மிக உரிமையான வள் உயிரினும் மேலாக நினைக்ககூடியவள் மனைவி உன்னை திருமணம் செய்து மாதம் ஒன்று ஆக வில்லை ஆகையால் மனங்கலங்காதே கணவன் வீர மும் திரமையும் கண்டு களிப்பு அடைய வேண்டிய வள் நீதான் நான் சொல்வதைகேள் நான் போருக்கு போகவேண்டும் உன்புன்னகை பூத்த முகத்தோடு போய் வா என்று கூறு கண்ணே

(கன்னத்தை திருப்பி)

மனைவி:- என்னமோ எனக்கு பயமாக இருக்கிறது இரவு கண்ட கனவு நினைவுக்கு வந்தால் என் நெஞ்சம் துடிக்கிறது நான் சொல்வதை கேளுங்கள் எனக்கு யார் துணை இன்பம் துன்பம் எல்லாம் உங்கள் கை யில் தானே இருக்கிறது பெண்ணுக பிறந்து இந்த இளமையில் என் இதயத்தில் இன்பத்திற்கு பதில் துன்ப சுழல் அடிக்க வேண்டுமா நினைத்து பாருங் கள் என் நிலை என்ன ஆவது கடூரமான கனவு

பாதர்வெள்ளை:- கனவு நினைவின் ஒலி அதை கண்டு கலங்கு வது அர்த்த மற்றது ஏது நினைவில் அலைமோது

கிரதே அது கனவாக காட்சி அளிக்கிறது அதை கண்டு கலங்குவது சரியல்ல நான் சொல்வதை கேள் கணவன் இஷ்டமே மனேவியின் இஷ்டம் இது தான் கன்னி தமிழ் நாட்டு பெண்மணிகள் பண்பு அதை மரந்து பேசாதே வீர மரபில் பிறந்து வீணுக மனதை அலட்டி கொள்ளாதே எதிரிகளே வென்று வெற்றி முரசு கொட்டி வீரப்பட்டம் பெற்று வர வேண்டும் இல்லா விட்டால் போரிலே வீர முடன் மாரிலே வாள் ஏந்தி மடிய வேண்டும் என்று கூறியவலும் தமிழ் நாட்டு பெண்மணி தான் அந்த பரம்பரையில் பிறந்த நீ கணவனே போருக்கு போகாதே என்று கண்ணீர் விட்டு கதரலாமா இது நம் நாட்டு பெண்களுக்கே அவமானம் வேண்டாம் எனக்கு விடை கொடு அழுது புலம்பி அலட்டி கொள்ளாதே

மனேவி:- எப்படி கூறினுலும் எதை சொன்னுலும் சரி என் மனம் சஞ்சல படுகிறது என்ன செய்வேன் உங் களே அனுப்ப வேண்டியது தான் கணவன் மனே விக்கு மகிழ்ச்சி தான் பெருமைதான் ஆனுல் இன்று போக வேண்டாம்

பாதர்வெள்ளே:- நீ கோழை வீரனுக்கு மனேவியாக இருக்க தகுதி இல்லாதவள் உன் இடம் விடையே வேண் டாம் (போகுதல்)

[இடம்:- பாஞ்சாலங்குரிச்சி கட்ட பொம்மு கோட்டை வேகமாய் வந்த பாதர்வெள்ளே கட்டபொம்மனே நோக்கி]

பாதர்வெள்ளே: இது வரையில் நமக்கு அஞ்சியவர்கள் மிஞ்சி விட்டனர் கெஞ்சி பேசியவர்கள் வஞ்சகம் செய்து

விட்டார்கள் கொஞ்சி பேசியவர்கள் கொடுமை செய்து விட்டார்கள் சண்டாளர்கள் சாலி குளத்தி லேயே கொடி நாட்டி சண்டைக்கு கூடாரமும் அடித்து விட்டார்கள் இனி ஒரு நிமிஷமும் தாமதித் தாலும் எல்லோருக்கும் ஆபத்து எதிர்த்து போரிட இப்போது போக வேண்டும்

கட்டபொம்மு:- சரி வெள்ளம் பெருகி விட்டது வீணர்கள் நிறைந்து விட்டனர் விரைந்துசெல்லவேண்டும் சாலி குளத்தில் கொடி நாட்டிய சண்டாளர்கள் கூட ராத்தை சவக்காடு ஆக்க வேண்டும் ஊக்கம் கொண்ட அந்த உலுத்தர் கூட்டத்தை ஒழித்து கட் டிட வேண்டும் புரப்படுங்கள்

பாதர்வெள்ளை:- அண்ணு தாங்களும் ஊமதுரையும் கோட் டைக்கு வெளியிலேயே வர வேண்டாம் கும்பினி யார் கூட்டம் சின்னமக்காலே பெரியமக்காலே வேரு வழியில் தீங்கு செய்ய காத்திருக்கிருன் நான் சுந்தரலிங்கம் படைகளோடு போகுருேம் நாங்கள் திரும்பினுல் வாழ்வோம் நான் அந்த தீயவனுக்கு இரையாகி விட்டால் தாங்கள் இருவரும் கோட்டை யில் இருந்து தப்பி வேரு இடம் சென்று விடுங்கள்

கட்டபொம்மு:- வெள்ளைத்தேவா அந்த வீணர்களுக்கு நீ இரை யானதை கேட்டு நாங்கள் வேரு இடம் செல்வதா இது நடக்க கூடியதா?

தானுதிபதி:- சற்று ஆலோசித்து பாருங்கள் அனைவரும் அவன் இடம் சிக்கி விட்டால் நம் திட்டங்கள் எல் லாம் தரை மட்டமாகிவிடும் அந்த கொடியவர் கொட்டம் வலுத்து விடும் இதற்க்கு இடம் தரக் கூடாது முக்கியமாக இருவரும் தப்பி விட்டால் அந்த முரடர்கள் என்றைக்கும் சஞ்சலப்பட்டுபட்டு

சாம்பலாவார்கள் நினைத்து நினைத்து நிர்மூலமாவார்கள் கலங்கி கலங்கி தவிப்பார்கள் இதை நாம் செய்தே ஆக வேண்டும் தீமையை தீமையால் ஜெயிக்க வேண்டும் நீங்கள் அவசியம் இந்த இடம் விட்டு தப்பியே ஆக வேண்டும்......................

(ஓடி வருதல் ஊமதுரை)

ஊமதுரை:- அண்ணா புரப்படுங்கள் புரமுதுகு காட்டிய போலிப்பயல்கள் போர் முரசு கொட்டி விட்டானும் சாலி குளத்தில் கொடி நாட்டி நம்மை சண்டைக்கு வரச்சொல்கிறானும் உருண்ட தலைகளை எண்ணி பார்க்க வில்லை விரண்டோடிய வீரர்களை விசாரிக்க வில்லை போலும் மடையர்கள் இந்த இடத்தில் கூடாரம் அடிக்க எத்தனை துணிவு மடையனுக்கு மண்டை கொர்வம் பிடித்த இந்த கூட்டத்தை ஒழிக்காமல் ஒரு நிமிஷமும் இருக்க கூடாது இந்த கூட்டத்தை ஆதரிக்கும் கும்மாளக்காரரையும் கொளுந்தியே துலைக்க வேண்டும் புரப்படுங்கள்...............

கட்டபொம்மு:- உண்மை தான் ஆனல் பல காவாலி கூட்டம் அவன் காலடியில் கிடக்க அவனை போற்றுகிறது எப்போதும் உடல் வியாதி தான் தன்னை கொல்லும் நாம் தானதிபதி சொல்லியது போல் தப்பித்தான் ஆக வேண்டும் இந்த அக்ரமக்காரனை அழித்துத் தான் தீரவேண்டும் ஆகையால் இந்த சமயம் கொஞ்சம் சாந்தமாக இரு இப்படி ஆத்திரம் கொண்டு சில அற்ப்பர்கள் நம் பாரத திருநாட்டை பாழ் படுத்தி விட்டனர் நாம் அந்த வஞ்சகரை ஜெயிக்க வேண்டு மானல் இந்த முறையைத்தான் கையாள வேண்டும் நான் சொல்வதைகேள் பாதர் வெள்ளை நீங்கள் புரப்படுங்கள்

[பாதர்வெள்ளை சுந்தரலிங்கம் மற்றும் படைத் தளபதிகளும் அனைவரும் அணிவகுத்து நிற்க]

கட்டபொம்மு:- போரிலே புரமுதுகு காட்டாத நாடு இது வீரத்திலே வேரெந்த நாட்டவனுக்கும் விரண்டோடிய நாடல்ல இது சூலைகளத்தில் மடிந்தாலும் மகிழ்ச்சியோடு மடியும் வீரர்கள் தோன்றிய நாடு ஆகையால் அந்த வீணர்களை வீழ்த்த வேண்டும் இதற்கு அஞ்சாது படைகளை கொண்டு வெல்லுங்கள் அவன் துப்பாக்கி குண்டுகளை பரித்து கொண்டு இதயங்களில் ஈட்டிகளை பாச்சுங்கள் இதய மற்ற கொட்டத்தின் எங்கும் சுளிக்கிகளும் சுழலும் பரக்கட்டும் அந்த பஞ்சைகள் மனம் பதரட்டும் கொஞ்சமும் இரக்கம் காட்ட வேண்டாம் நடக்கட்டும் போர் போர் என்று முரசு கொட்டுங்கள் முட்டாள் கட்டியாள எத்தனை கட்டான படைகள் உன் விஞ்ஞானத்தில் உதித்த மருந்து தோட்டாக்கள் எங்களை எதுவும் செய்யாது அதை வைத்து கொண்டு நீ எங்களை அடக்கி ஆளவும் முடியாது என்று முரியடியும்ம்.........போங்கள்

[படைகளும் பாதர்வெள்ளை கருப்பண்ணு சுந்தரலிங்கம் அனைவரும் போக இந்த சமயம் வழியில் சுந்தரலிங்கத்திடம் சோகமாய்]

பாதர்வெள்ளை:- சுந்தரலிங்கம் என்றுமே இல்லாத மனக்கலக்கம் சண்டைக்கு பயந்து அல்ல இந்த இளமையில் ஓர் பெண்ணின் வாழவை பாழ்படுத்தி விட்டோமே

என்று ஆகையால் அந்த சஞ்சலம் என் மனதை விட்டு அகல வில்லை ஆகையால் என்ன செய்வது என்று தான்

சுந்தரலிங்கம்:- யாருக்கும் அஞ்சாத பாதர்வெள்ளை அவனிக்கு அஞ்சாத காலன்துரை குண்டுக்கு அஞ்சாத பாதர்வெள்ளை ஈட்டிக்கு அஞ்சாத காலன்துரை வெள்ளையனை கண்டு மிரளாத பாதர்வெள்ளை வீரத்தை கண்டு ஓடாத காலன்துரை

பாதர்வெள்ளை:- மலையோடு மலை................வாளோடு வாள்

சுந்தரலிங்கம்:- இல்லை எல்லை கல்லோடு தேங்காய் எருது புண்ணிலே காகம்........சரி வந்து விட்டோம்

[போர் முரசு கொட்ட சண்டை ஆரம்பம் எங்கும் மும்மரமாய் நடந்தது அப்போது பாதர்வெள்ளை இடம் வந்து]

காலன்துரை:- வெள்ளையரை விரட்ட வீண் கொட்டமடிக்கும் கூட்டத்தைச்சேர்ந்த அர்ப்பனே நீயாரடா?

பாதர்வெள்ளை:- கை கூலிகளை கொண்டு எங்கள் நாட்டை ஆளதிட்டம்போட்ட காவாலிபயல் நீதானடா அர்ப்பனே சொந்த நாட்டான் வீரம் காட்டுவதில் என்னடா தவரு உங்களைப்போல் அன்னிய நாட்டுக்கு ஆசைப்பட்டு அக்ரமம் செய்வது நாங்களல்ல நாயே

காலன்துரை:- எத்தனை வீராப்பு எத்தனை மமதை இந்த கூட்டத்தில் உள்ள மடையர்களுக்கு கொடுமைதான் குமுருகிறது கொந்தளிப்புதான்புரளுகிரது உங்களை கூண்டோடு கொளுத்தி ஒழிக்க வேண்டும்.

பாதர்வெள்ளை:- அடுத்த நாட்டவனுக்கு ஆசைகாட்டி மோசம் செய்யும் மூர்க்கர் கூட்டமானஉங்களை முரியடித்தே தீருவோம். யுத்தவெரிபிடித்த பித்தர்களே உங்களை இனி விடப்போவதில்லை உங்களுக்கு பக்கமேளம் போடும் பாதகரான பச்சோந்திகளையும் கொன்று குவித்து குவலயத்தில் அமைதியை நிலை நிருத்துவோம் அக்ரமத்தை அழிப்போம் உங்கள் இடமெல்லாம் சுடுகாடாக்கினாலும் சூதகரான உங்களை பாதகம் இல்லை

காலன்துரை:- அழியப்போகும் சமயம் ஆ வே ச ம் ஒழியப் போகும் சமயம் ஓங்காரம் மடியப்போகும் சமயம் மமதை பேசும் மடையனே இந்த நாட்டிலே எத்தனையோ கூட்டம் இருக்கிறது நீமட்டும் ஏனடா எங்களை விரட்டுகிறாய் மிரட்டுகிறாய் நன்றாக வாழமுடியாத நாயே

பாதர்வெள்ளை:- அந்த அரிவற்ற அறிவிலிகள் உன்னால்அடக்கி ஆள ஆசைப்படும் அர்ப்பபுத்திக்காரர்கள் அவர்களைக்கொண்டுவந்து என்னோடு சேர்க்காதே உங்களைப்பற்றி நாங்கள் நன்றாகஅறிவோம் உங்களுக்கு மண்டியிட இசைந்து மார்த்தட்டிபேசும் அந்த மடையர்களையும் எங்களுக்கு புரியும் இதெல்லாம் ஏனடா நடக்கட்டும் போர் நன்றி கெட்டவனே போரிலே நான் மடிந்த பிரகு ம ம தை பே சி மகிட்சிகொள் போர்...................போர்......................

[படைகள் சண்டையிட்டு ஓய்ந்தது பாதர்வெள்ளை மட்டும் பாக்கி அதைக் காட்டி காலன்துரை]

காலன்துரை:- என்ன எத்தனை கூறியும் தத்தாரி உளரிக் கொட்டுகிருன் நன்ருக வாழட்டுமே என்ருல் நாய் குலைக்குரது சொல் இப்போதாவது சொல் போர் நிருத்தலாம் பார் உன் படைகளை பார்....(சிரிப்பு) எரிமலைப்போல் குமுரிய உன் படை இருந்த இடம் தெரியவில்லை பரந்தோடி விட்டது இப்போது....நீ இரக்கை ஒடிந்த பட்சி இரைத்தேடமுடியாத குருவி உன் குணத்தை மாற்றி கூறு...............

பாதர்வெள்ளை:- உங்களைபோல் கோழையல்ல நாங்கள் தோல்வியைக்கண்டு துயரால் ஓடிவிடமாட்டோம் நான் ஒருவன், நயவஞ்சக கூட்டமான உங்களைக் கொன்று குவிப்பேன் அல்லது உன் குண்டுக்கு இரையாகி மடிவேன்

காலன்துரை:- (சிரிப்பு)........சபாஷ் சாமார்த்தியசாலி இரக்க போவது நாங்களல்ல நீதான் குலைகளத்தில் குரிதி சொரிய மடியப்போவது நாங்கள் அல்ல நீ தான் யார் அங்கே? நிதானமாக பேசடா என்ருல் நெருப் புப் பந்தத்தை நீட்டுகிருன் அமைதியாக இருக்கச் சொன்ஞல் அக்கினிமலையாகிருன் அகந்தைக்காரன் ஆகட்டும்............ம்........இந்த மடையன் மாரிலே பீரங்கியை திருப்புங்கள்............(சிரிப்பு)............

பாதர்வெள்ளை:- உன் குண்டுகளைக்கண்டு அஞ்சப்போவது நானல்ல இந்தா வாங்கிக்கொள் இந்த ஈட்டியை....

[பாதர்வெள்ளை ஈட்டி வீச அது சமயம் காண்டாங்கிமேஷர்துரை பாதர்வெள்ளையை சுட்டு விடுதல் பாதர்வெள்ளை கீழேசாய்ந்தார் உடனே இதைக்கண்ட]

காலன்துரை:- போருக்கு அஞ்சாத பாதர்வெள்ளை புரண்டு விட்டார் மண்ணிலே................(சிரிப்பு)................ மடிந்தான் என்ற சேதி கேட்டு கொதிப்புற்று வருவான் கட்டபொம்மன் இந்த குண்டுகள் அவனுக்கு பதில் கொடுக்கும்............(சிரிப்பு)........அழிந்தான் ஒழிந்தான்

[இந்த சேதியைக்கேட்டு பாதர்வெள்ளை மனைவி போர்களம் ஓடுகிறுள் இந்த சமயம் கட்டபொம்முவுக்கு இந்த சேதி எட்டுகிறது இதைக்கேட்டதும்]

[கட்டபொம்மு தன் தம்பி ஊமதுரையிடம்]

கட்டபொம்மு:- தம்பி பாதர்வெள்ளையும் படைகளும் அழிந்து விட்டனர் கடுமையான ஆயுதம் கொண்டு வந்து கூடாரம் போட்டு விட்டான் காலன்துரை

ஊமதுரை:- அந்த கயவனை நாம் சென்று கண்ட துண்டமாக்குவோம் அல்லது பாதர்வெள்ளையை போல் நாமும் போரிலே மடிவோம் வாருங்கள் போகலாம்

கட்டபொம்மு:- தம்பி குண்டுக்கு அஞ்சாத குட்ட கருப்பன் திட்ட வகுப்பதில் நிகரற்ற வீரர் தானதிபதி படைக்கே அஞ்சாத பாதர்வெள்ளை அனைவரும் போய் விட்டது கட்டான நம் கம்பளத்தார் படை தரை மட்டமாகி விட்டது இன்று நாமாவது தப்பி இவர்களை பழிக்கு பழிவாங்க வேண்டும் புரப்படு வெளியூர் சென்று எப்படியும் நாம் இந்த வீணர்களை அழிப்போம் இங்கு இருப்பது ஆபத்து நான் சொல்வதைகேள்

[கட்டபொம்மன் ஊமதுரை இருவரும் வெளியூருன நாகலாபுரம் போக ஏற்பாட்டோடு குதிரையில் செல்ல]

[இடம்:- சாலிகுளம் போர்க்களம் அங்கு பாதர்வெள்ளை மனைவி வந்து நின்று கொண்டு பாதர்வெள்ளை பிணத்தை எடுத்து மடியில் வைத்து கொண்டு]

மனைவி:- அன்று சென்னேனே கேட்டீர்களா இந்த சோம் பேரி கூட்டமான சோற்று பட்டாளம் சுட்டு தள்ளி விடுவார்கள் என்று (இதை கண்டு ஓடிவந்த)

காலன்துரை:- யூஸ்லஸ் இடியட் அந்த நாயை தூக்காதே

[இதை கேட்டு அவள் மனம் பதறி அவன் அருகில் ஆவேசமாய் சென்று]

பா. மனைவி:- என்ன சொன்னே என் கணவனை தொடாதே என்று என் கணவனை தூக்காதே என்று அடா நன்றி இல்லா நாயே இரக்கம் இல்லா அரக்கனே உங்கள் பெண்களைபோல் ஒய்யாரமாட தெரியாது ஆனால் நாங்கள் சண்டைக்கு நின்றால் உங்கள் கூட்டம் ஒழிந்து சாம்பல் ஆகிவிடும்

காலன்:- நரி மடிந்தது இப்போது நாய் ஊளை இடுகிறது

[இதை கேட்டு ஒருவன் வந்து பாதர்வெள்ளை மனைவியை சுட்டான் உடனே அங்கு குட்டகருப்பனும் தானாதிபதியும் வந்தனர் உடனே சுட்டனர் தானாதிபதி மடிந்தார் குட்ட கருப்பன் காலன்துரை இடம் வந்து]

காலன்துரை:- யார் நீ ஏன் வந்தாய்

கருப்பன்:- காலன்துரை என்ற உன்னை கண்ட துண்ட மாக்க வந்த குட்டகருப்பன் நான் பாதர்வெள்ளை

யும் மற்றும் எங்கள் படைகளையும் கொன்று குவித்த உன்னை என் சுழல் வீச்சால் சிதரடிப்பேன் என்னை உனக்கு தெரியாது இது தான் சிலம்பு விளையாட்டு பார்

[என்று வீச பலர் வெள்ளையர்கள் மடிந்தனர் சுட்டு பார்த்தான் குண்டுகளை எப்படியோ தடுத்தான் இதை கண்டு கலங்கி]

காலன்துரை:- (உடனே காலன்துரை) என்ன அற்ப்புதம் நம் துப்பாக்கி குண்டுகளை கூட தடுக்கிறான்

கருப்பன்:- காலன்துரை என்ற கழுதையே பார் இந்தியர் போரை விரும்பமாட்டோம் வந்தால் விடமாட்டோம் பார் அக்ரமமாக அழிக்க மாட்டோம் ஆயுத மற்ற வரை ஒழிக்க திட்டம் இட மாட்டோம்....பார்....பார்

[இவைகளை கண்ட காண்டாங்கி மேஷர்துரை பீரங்கியை பின்னால் திருப்பி சுட்டான் அதில் கருப்பன் மடிந்தான்]

காலன்துரை:- ஈசல் சீஸனைபோல் திடீரென ஒரு ஆள் வருகிறான் பார்க்கலாம் இந்த முரடர் கூட்டம் இன்னும் எவ்வளவு தான் இருக்கும் என்று என்னவோ சொல்கிறான் வெல்வேன் என்று குதிக்கிறான் பிறகு நம் குண்டுக்கு தான் இரையாகிறான் ஆட்டு மந்தைகள் நரி இடம் அகபட்டு தவிக்கிறது..................

[இடம்:- கும்பினி அங்கு இருவரும் செல்லும் சமயம் இவர்களை கண்டசின்ன மக்காலே பெரியமக்காலே சாம்பிராணி புகையை எழுப்பி இவர்களை தடுத்தனர்

ஆனல் கட்டபொம்மு ஊமதுரை அகப்படவில்லை சாம்பிராணி புகை வாடையால் இருவரும் தனியாக பிரிந்து விட்டனர் குதிரை மிரண்டது கட்டபொம்மு குதிரை சிவ கெங்கை நோக்கியும் ஊமதுரை குதிரை நாகலாபுரம் நோக்கியும் போனது ஆனல்வேகமாய்சென்ற கட்டபொம்மு குதிரை சிவ கெங்கை வந்தது]

[இடம்:- சிவ கெங்கை சின்னமருது பெரியமருது இருவர் இடம் வேகமாய் வந்ததும்]

கட்டபொம்மு:- மருது மருது (இதை கண்ட)

மருது:- கட்டபொம்மு என்ன இது ஏன் இப்படி பதட்டம்

கட்டபொம்மு:- மருது மனமுடைந்து விட்ட்து மகத்தான படைத்தலைவன் பாதர்வெள்ளை மடிந்து விட்டான் கட்டான நம் படைகள் அவன் குண்டுக்கு இரையாகி விட்டது திட்டமிடும் நம் தானதிபதியும் மடிந்தார் என்னேடு வந்த தம்பி ஊமதுரையும் சின்னமக்காலே சாம்பிராணி புகையால் வழியில் தவரி விட்டான் இந்த சமயம் நீதான் உதவவேண்டும் மருது இந்த மடையர்களுக்கு நாம் அடிமையாக வாழ்வதா சொல் மருது அல்லது இந்த சண்டாளரை ஒழிக்க நாம் ஒன்று சேர்வதா மருது இதை சொல் மருது எது நல்லது மருது நாம் செய்வது எது

மருது:- கட்டபொம்மு முதலில் ஊமதுரையை தேட ஆள் அனுப்பலாம் பிறகு நீ சொல்கிறபடி அந்த வெள்ளையன் கொட்டத்தை அடக்கலாம் அமைதியாக இரு நீ

[இடம்:- நாகலாபுரம் அங்கு ஊமதுரை சென்ருன் இதை கண்ட ஏற்றப்ப நாய்க்கர் ஆத்திரமுடன் இருக்க]

ஊமதுரை:- ஏற்றப்ப நாயகரே எங்களை ஏமாளிகள் எதிற்க்க தீவிரமாக போர் படைகளோடு வந்து விட்டனர் தாங்கள் தான் உதவி செய்ய வேண்டும்

நாய்க்கர்:- ஊதாரி பயல்களே உங்களை இப்பொழுதே பிடித்து கொடுக்கிரேன் பார் வீராப்புவேரோ....................நாயே

ஊமதுரை:- காட்டி கொடுக்கத்தானே உங்களைப்போல் ஒரு கூட்டத்தை வைத்து இருக்கிருன் வெள்ளையன் இல்லை என்ருல் ஈட்டிக்கு அஞ்சாத எங்களை வெல்ல முடியுமா அவனுக்கு? போகட்டும் நீயாவது நன்ருக வாழ் நாட்டை காட்டிக்கொடுத்துக்கொண்டு நற்றமிழ் மொழியிலே நய வஞ்சகமாக மக்களை ஏமாற்றிவரும் உங்கள் கூட்டத்தின் வேஷம் கொஞ்சநாளையில் மக்கள் அரிவார்கள் அனியாயக்காரனே வருகிறேன்..............................

[குதிரையை திருப்பி விட்டான் புரப்பட்டது வேகமாய் எங்கு போவது என்றே தெரியவில்லை மனம் பதறியது]

இடம்:- சிவ கெங்கை மருத பாண்டியன் இல்லம் அங்கு நோக்கி வெள்ளையன் படைகள் வருவதை கண்ட மருது ஓடி வந்து]

மருது:- கட்டபொம்மு அந்த முரடன் காலன்துரை கட்டான படையோடு வருகிருன் நீ இப்போதே இங்கிருந்து தப்பிவிடு அதுதான் சரி நான் சொல்வதை கேள் ஆத்திரத்தோடு வருபவனை அடிக்க சென்ருல் ஆபத்தாக முடியும் ஆகையால் நீ வெளிகோட்டை வழியாக புதுக்கோட்டை செல் இவனுக்கு சமாதானம் சொல்லி நான் பார்த்து கொள்கிறேன் பிறகு நாம் இவர்களை முறியடிக்க திட்ட மிடுவோம்

கட்டபொம்மு:- சரி நான் நீ சொல்கிறபடி புதுக்கேட்டை

சென்று அவர்கள் இடமும் நமக்கு ஆள் உதவி செய்யும்படி கோரி வருகிறேன் (போகுதல்)

[காலன்துரை படை வேகமாய் சிவ கெங்கை வருதல்]

[இடம்:- சித்தாத்துக் கால்வழி அங்கு வேகமாய் கட்டபொம்மு குதிரையில் போக அது சமயம் முஸ்லீம்கள் வந்து வழி மரித்து சண்டை இட் இதை கண்ட]

கட்டபொம்மு:- என் அன்பான முஸ்லீம் தோழர்களே? நீங்கள் கூறுங்கள் அதோ வருகிறது வெள்ளையன் படை அதை கண்டு நாம் சண்டை இடலாமா நாமெல்லாம் ஒரே தாய் வயிற்று பிள்ளை இல்லையா? தமிழனுக்கு ஒருகுறள் உண்டாக்கிய ம்கானை போல் முஸ்லீமுக்கு ஓர் குறள் இருக்கிறதே நீங்களும் நாங்களும் எப்போதும் நீதி வழியில் ஒன்ருக தானே செல்வோம் இன்று நாம் சண்டை இடலாமா? அதுவும் எதிரி விரட்டும் சமயம் அன்னியன் விரட்டும் சமயம் ஆதரிக்க வேண்டிய தாங்கள் இப்படி செய்யலாமா?

முஸ்லீம்:- சரி கட்டபொம்மு நீபோ நாங்கள் அந்த வெள்ளையனை விரட்டுகிறோம்

[இதற்க்குள் காலன்துரை படை வந்தது உடனே முஸ்லீம்கள் எதிர்த்தனர் உடனே காலன்துரை ஆத்திரமாய் செய்து பார்த்தான் முடியவில்லை நேரில் வந்தான் கட்டபொம்மு கண்டதும் காலன்துரை கதரினன் பதரினன் மருந்துகள் காலியானது]

[காலன்துரை அருகில் வந்து நின்று]

கட்டபொம்மு:- காலன்துரை பார் இதை பார் என்றும் இந்தும் முஸ்லீம் ஒன்று என்பதை உணரு நவாப்பை போல் நயவஞ்சகர் அல்ல இவர்கள் உனக்கு இடம் தர காலன்துரை உன்னை கண்ட துண்ட மாக்கி நரி களுக்கும் நாரைகளுக்கும் இரை கொடுக்க போகி றேன் என் பட்டாளங்களை அழித்து என்னை பிடிக்க திட்டம் போட்டாயே அது நடக்காதடா நன்றிகெட்ட நாயே பார் இப்போது பார் இது தான் வீரத்தாய் நாட்டின் பண்பு அன்பு புரிந்துக்கொள்

காலன்துரை:- மடியப்போகும் நேரத்தில் ஏனடா துடி துடிக் கிருய் மடையனே உன் ஆவேசத்தை அழிக்க பிறந் தவன் இந்த காலன்துரை

கட்டபொம்மு:- வெள்ளையனை விரட்ட ஆங்கிலேயனை அழிக்க பிறந்தவன் கட்டபொம்மன் உங்கள் வர்க்கத்தை பூண்டோடு பொசுக்காமல் விடமாட்டேன் போலிப் பயல்கள் நீங்கள்

[குண்டுகள் வெடிக்க காலன்துரை யும் மற்றவரும் தோல்வி யுற்றதை நினைத்து வருந்தி சென்னை திரும்ப அந்த சமயம் கட்டபொம்மு தன் சொந்த நகர் பாஞ்சாலங் குரிச்சி போகுதல் இந்த சம யம் மருது பாண்டியன் படை ஊம துரையை கண்டு பிடித்துவர கட்டபொம் மன் ஊமதுரையுடன் வந்தபடைவீரர்கள் பாஞ்சாலங் குரிச்சியில் சந்தித்து கட்ட பொம்மு கோட்டையில் வந்ததும் ஊம துரை இடம்]

[இடம்:- பாஞ்சை நகர் கட்டபொம்மு கோட்டை]
(தம்பியும் படையும் கண்ட)

கட்டபொம்மு:- தம்பி மருது பாண்டிய வீரர்களே வாருங்கள் மன முடைந்த எங்களுக்கு ஆருதல் கூறும் காளை களே வாருங்கள் நம் நாட்டில் காட்டி கொடுப்பவ ரும் நாட்டு பற்று உடையவரும் கலந்து தான் இருக் கிருர்கள் இதனுல் நாம் இனி வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் சரி தம்பி நீ சின்னமக்காலே இடம் எப்படி தப்பினுய்?

ஊமதுரை:- அண்ணு சின்னமக்காலே இடம் தப்பி விட்டேன் ஆனுல் நாகலாபுரத்து ஏற்றப்ப நாய்க்கன் என்னை காட்டி கொடுக்க திட்டம் இட்டான் அவன் இடம் தப்புவது தான் ஆபத்தாக முடிந்தது.........ம்........ மடையர்களை விரட்டியடித்து புரப்பட்டேன் அது இருக்கட்டும் நீங்கள் எப்படி தப்பினீர்கள்?

கட்டபொம்மு:- சித்தாத்து முஸ்லீம்கள் உதவியால்

ஊமதுரை:- நன்றிகெட்ட நவாப்பை போலும் எட்டயா புரத் தானை போலும் இல்லாமல் இருந்தது பற்றி மகிழ்ச்சி சரி இனி நாம் தக்க பலத்தோடு இருக்க வேண்டும்

[இடம்:- சென்னை கவர்னர் மாளிகை
அங்கு காலன்துரையும் மற்றபடைகளும்
வந்து ஆத்திரமாய் காலனை பார்த்து]

ராணி:- என்ன நடந்தது கட்டபொம்மன் மடிந்தானு?

காலன்துரை:- மடையர்கள் என்ன வித்தைகள் கற்று இருக்கு ருர்கள் ஒருவன் குச்சி வீசுகிருன் அதை தடுக்க முடியவில்லை அவன் படைகள் அப்படியே சாம்பல்

ஆனால் சித்தாத்து முஸ்லீம்களோடு சேர்ந்து கர்ச்சனை செய்கிறான் கபோதி நாய் இதற்க்கு தக்க படையோடு போய் அவனை ஒழிக்காமலா விடுவது

ராணி:- சரி அக்கினி பட்டாளம் அனைத்தையும் அழைத்து கொள்ளும் இருக்கும் பீரங்கி எல்லாம் கொண்டு செல்லும் கட்டபொம்மன் கொள்ளைக்காரன் கொலை காரன் அவனை பிடித்து தருபவருக்கு பத்தாயிரம் பொன் பரிசு என்று பரை சாற்றும் புரப்படுங்கள் இப்போதே?

(இடம்:- பாஞ்சை நகர் அங்கு தண்டோரு போடுகிறான்)

விபரம்

இதனால் சகலருக்கும் தெரிவிப்பது என்ன வென்றால் கட்டபொம்மு ஊமதுரை இருவரும் வெள்ளையரை வெட்டியும் ஆஸ்திகளை அழித்துக்கொண்டும் அவர்கள் மீது கொலை குற்றமும் மற்றும் பல குற்றமும் சாட்ட பட்டிருக்கு அவரை கண்டு பிடித்து தருபவருக்கு தக்க சன்மானம் வழங்கப்படும் இது காலன்துரை உத்திரவு

[இதை கேட்டு கொண்டு இருந்த சிலரில்]

ஒருவன்:- பாஞ்சாலங் குரிச்சியில் பகைவன் ஆதிக்கமா? காகம் பரக்காத கட்டபொம்மன் கோட்டையிலே வெள்ளையரின் ஆதிக்கமா என்ன கெட்ட காலம் இது

[இடம்:- பாஞ்சாலங்குரிச்சி அங்கு ஊமதுரை கட்டபொம்மு இருவரும் தண்டோரு போட்டு இருந்த விஷயமாக ஆத்திரப்பட]

ஊமதுரை:- குட்டைகளை குழப்பி பருந்துக்கு விட பார்க்கிறான் கொட்ட மடிக்கிறான் மட்டிபயல் நம்மீது கொலைகுற்றம் என்று தண்டோரா இடுகிறான் நாடோடியாக கிடந்த கூட்டம் நாடாளுவது மல்லாமல் நம்மை கொள்ளையர்கள் என்று கூறுகிறான் வெள்ளையர் தான் நாடாள பிறந்தோம் என்று வேதாந்தம் பேசுகிறான் பகல் வேஷப் பரதேசி பயல்கள் விரட்டி அடிக்காமல் இனி ஒருக்ஷணம் கூட இருக்க கூடாது

[இது சமயம் ஓடி வந்த அடிக்கல கருப்பு]

கருப்பு:- பெரிய ஆபத்து அக்கினி பட்டாளத்தோடு காலன் துரை வந்து விட்டான்

கட்டபொம்மு:- வரட்டும் இங்கே அந்த வாழ முடியாத வர்க்கம் அக்கினி பட்டாள மானாலும் சரி இந்த அவனி புகழும் அந்த கிருஷ்ணன் சக்கராயுத மானாலும் சரி இந்த கொஞ்சு மொழிகாரரை கொன்று குவித்தே ஆகவேண்டும் வஞ்சகர் மிஞ்சி விட்டனர் நெஞ்சிலே ஈட்டிகளை பாச்சியே ஆக வேண்டும் நேருக்கு நேர் போர் செய்ய தெரியாத கோழைகள் எங்கோ காட்டிலே திரிந்த நரிகள் வீட்டிற்க்குள் நுழைய வேட்டை நாய்களை சேர்த்து நம் நாட்டிலே கொடி கட்டி கூடார மடிக்கிறது படைகள் எல்லாம் தயாராகட்டும் போர் முரசு கொட்டுங்கள் முட்டாள் கொட்டத்தை அடக்கியே ஆக வேண்டும் ஆகட்டும் தயாராகட்டும் ஈட்டிகளுடன் புரப்படுங்கள்

[இடம்:- சாலி குளம் வெள்ளையர் கூடாரத்தின் மீது படைகள் பாய்ந்தது காலன்துரை எழுந்தான் கர்ச்சித்தான் குண்டுகள் வெடிக்க போர் நடக்க]

காலன் துரை: எட்டு திசையிலும் வெள்ளையன் வெற்றி கொடி பறக்கும் சமயத்தில் வீணுக கொட்ட மடிக்கும் கட்டபொம்மா? என் குண்டுக்கு இரையாகாதே சட்டம் அரிந்து நட

கட்டபொம்மு:- உன்னுடைய உலுத்துபோன சட்டம் ஊதாரி கூட்டத்தை உயர்த்தி வளர்க்கும் சட்டம் வகுத்து விட்டதாக கொட்ட மடிக்கும் கையாலாகாத காலன் துரை என்ற மடையனே என் கத்திக்கு இரையாகாமல் தப்பிப்போ

காலன் துரை:- அனல் கக்கும் வார்த்தை சிங்கம் போல் கர்ச்சனை சீரி எழும்வேங்கை கொந்தளிக்கும் கடல் போல் குமுரும் கட்டபொம்மா கொஞ்ச நேரத்தில் உன் மாரிலே துப்பாக்கி குண்டுகள் துள்ளி விளையாடும் ஆவேசம் அக்கினிமலை அழிய போகிறது மாண்டுவிட போகும் நேரத்தில் மரணகீதம் சாபாஷ்

(சிரிப்பு)

[கட்டபொம்மு வாளை உருவிக்கொண்டு]

கட்டபொம்மு:- மாண்டுவிட போவதாக எண்ணி ஏனடா மார் புயர்த்தி எக்காளம் போடுகிருய் வெள்ளை நாய்கள் மண்டை உருளும் சமயத்தில் வேரு நாட்டவனை விரட்ட வீரிட்டு எழுந்த நேரத்தில் கோடிட்ட கட்ட பொம்மன் எல்லையில் வெள்ளையன் கொடிபரப்பதை கண்டு கொதித் தெழுந்த நேரத்தில் ஏனடா மரணம் என்று மகிழச்சி கொள்கிருய்....(வாள் வீச).... காலன் துரை என்ற காவலி கூட்டத்தின் தலைவனே உன்னை கத்திக்கு இரையாக்காமல் போவதில்லை உங்களை கண்ட துண்ட மாக்கி காட்டாரு எல்லாம் மேட்டாங்காடு ஆக்கி விடுகிறேன் பார்

[சண்டை மும்மரமாக நடக்க பீரங்கி களும் குண்டுகளும் சொல்ல முடியாத சப்தம் இந்த நேரத்தில் கட்டபொம்மு படைகள் எல்லாமே குண்டுக்கு இரை யானார்கள் உடனே கட்டபொம்மு ஊமை துரை இடம் அணுகி]

கட்டபொம்மு:- தம்பி நீ இப்படி தப்பிவிடு நான் மருது பாண் டியன் இடம் படைகேட்டு வருகிறேன் ஜாக்கிரதை

[சண்டை செய்து கொண்டே கட்டபொம்மு தப்புவதை கண்ட]

காலன்துரை:- தப்பி விட்டான் கட்டபொம்மன்....சுடு....சுடு விடாதே விடாதே விரட்டு

[படைகள் ஓட பக்கமதில் நின்ற காலன்துரை துரத்தி செல்ல ஊமை துரை வேரு பக்கம் போக]

[இடம்:- நத்தக்காட்டை சேர்ந்த காளைக்குடி முத்தையா பாண்டியன் இடம் போய் வேகமாய் குதிரை நிருத்தி கட்டபொம்மு]

கட்டபொம்மு:- பாண்டி வெள்ளையன் படை நம்மை விரட்ட ஆரம்பித்து விட்டது அவர்களை ஒழித்து கட்ட இந்த சமயம் உதவி செய்யுங்கள்

பாண்டி:- கட்டபொம்மு அன்னியன் நம் மீது படை எடுக்க முஸ்திப்புக்கள் செய்கிருன் ஆனால் இந்த சமயம் நமக்குள் எத்தனை விரோதம் இருந்தாலும் அதை விட்டு அவனை விரட்ட ஒன்றுபட வேண்டியது தான் இல்லை என்ருல் அது காட்டி கொடுக்கும் கைகூலி கள் என்று தான் கருத நேரிடும் (படைவருகிறது)

[கையால் காட்டி அதோ காலன் துரை படை வருகிறது]

கட்டபொம்மு:- இந்த சமயம் அவனை இங்கேயே அழித் தொழிக்க வேண்டும்

முத்து பாண்டி:- கட்டபொம்மா நீ மல்லாபுரம் வழியாக புது கோட்டை சென்று கொஞ்சம் படைகள் கேட்டு நேரே பாஞ்சைக்கு செல் உடனே எனக்கு தகவல் அனுப்பு உடனே....வந்து விட்டான் இவனை மடக்கி சரியான பாடம் நான் கற்பிக்கிறேன் நீ புரப்படு சீக்கிரம் (போகுதல்)

[கட்டபொம்மு போனதும் முத்து பாண்டியன் தன் படைகளை தயார் செய்தான் அது சமயம் அவேசமாய் வந்த காலன்துரை பாண்டியை பார்த்து]

காலன்துரை:- இங்கு ஓடி வந்த கட்டபொம்மன் எங்கே?

முத்துபாண்டி:- கட்டபொம்மன் ஓடி வந்தானு? கனவு கண் டீரு? அல்லது புத்தி கோளாரு?

காலன்துரை:- முட்டாள் தனமாக உளருதே சுட்டு தள்ள போகும் சமயம் தப்பி ஓடிவிட்டான் மடையன்

முத்துபாண்டி:- (சிரிப்பு) கட்டபொம்மனை சுட்டு தள்ளுவதா? நீயா? இது முட்டாள் தனம்

[காலன்துரை பட படக்க]

காலன்துரை:- மட்டி பயலே கேட்ட கேள்விக்கு பதில் சொல் என்றால் கேலிகளும் கிண்டலும் செய்கிருன் சுண் டக்காய்

முத்துபாண்டி:- துப்பாக்கி குண்டுகள் கொண்டு வந்து இருப்ப தாக கூறும் காலன்துரை இந்த முத்துபாண்டியன்

இடம் உன் வெத்து தோட்டாக்களின் சத்தம் ஒன்றும் செய்யாது வெட்டி வீழ்த்த போகிறேம் நடக்கட்டும் போர் [தன் படைகளை பார்த்து]

காலன்துரை:- கட்டபொம்மன் எங்கடா என்றால் நம்மையே வெட்டி வீழ்த்துகிறேன் என்று வீரம் பேசுகிறன் நடக்கட்டும் திருப்புங்கள் பீரங்கி யாரு இருந்தாலும் சுட்டு தள்ளுங்கள் கட்டபொம்மனை பற்றி பேசும் இட மெல்லாம் பிணக்கள மாகட்டும் அவர்கள் வாழும் இடமெல்லாம் சுடு காடு ஆகட்டும் நடக்கட்டும் சுட்டு தள்ளு............சிரிப்பு............

[போர் நடக்க முத்துபாண்டி இரக்க அங்கிருந்து காலன்துரை படைகள் யாவும் எட்டயாபுரம் நோக்கி கட்ட பொம்மனை தேடி செல்ல]

[இடம்:- கோளார் வழி போடி பட்டி கிராமம் பொட்டி பகடை இல்லம் ஊமதுரை அங்கு வேகமாய் செல்ல இதை கண்ட]

பொட்டிபகடை:- ஊமதுரை என்ன இது உலகை வெல்ல பிறந்தவன இப்படி மிரண்டு வந்தாய் வீணரை வீழ்த்த ‘பிறந்த வீரன் ஊமதுரையா இப்படி ஓடி வருவது என்ன நடந்தது சொல்லு

[இந்த சமயம் காலன்துரை பட்டாளம் இரு பங்காக பிரிந்து ஒரு பகுதி வந்தது]

[இதைக்கண்ட பகடை உடனே ஊமதுரை யிடம் இந்த இடம் விட்டு தப்பச்சொல்ல]

பகடை:- ஊமதுரை அதோ வருகிறது பட்டாளம் நீ நேராக கோலார் சென்று அங்கு என் தங்கை வெள்ளையம் மாளை அனுப்பு அந்த இடத்தை விட்டு நீ வெள்ளை யம்மாளிடம் கேட்டு கவுனகிரி பள்ளி சுரங்கத்தில் தங்கி இரு.

ஊமதுரை:- என் அண்ணவை விட்டா பகடை இந்த சமயம் உதவி செய்ய வேண்டியது நீ தான்

பகடை:- சரி நீ உடனே புரப்படு (ஊமதுரைபோக)

[ஊமதுரைபோக வெள்ளையன் படைவர இதைக்கண்ட பகடை சிரிப்போடு]

பகடை:- என்னனசார் எல்லாம் எங்கே வந்தீங்க?

வெ. கேப்டன்:- இங்கே வந்தானே ஊமதுரை எங்கே?.... (கீழ் இரங்கி) சொல் இல்லாவிட்டால் சுட்டுத்தள்ளி விடுவேன்..........ம்..........(துப்பாக்கி எடுக்க)

பகடை:- அய்யா வெள்ளையரே இந்த சலசலப்புக்கு எல் லாம் அஞ்சமாட்டான் இந்த பகடை

கேப்டன்:- இந்த பட்டிக்காட்டோடு என்னபேச்சு சுட்டுத் தள்ளு..........ம்..........நடக்கட்டும்................

[போலீசார் பகடையை சுட்டுத்தள்ளி போக இந்த சமயம் ஊரார் அலரி ஓட]

[இடம் மல்லபுரம் உழும் இடம் அங்கு கட்டபொம்மன் களைப்போடு குதிரையில் இருந்து இரங்கி தாகத்திற்கு தண்ணீர்கேட்க அங்கு பலர் வேகபட

கட்டபொம்மு:- ஐய்யா தண்ணீர் கொஞ்சம் கொடுங்க தாகம் ரொம்ப அதிகமா இருக்கு

மருதபட்டி மருதப்ப நாய்க்கன்:- எங்களுக்கே தண்ணீர் இல்லே போ........போ

[இதேபோல் ஆறுபேரும் சொல்ல ஏழாவது வந்த]

தேவர்:- ஐயோ தண்ணி வேணுமா இந்தா

[தனக்கு வந்த தண்ணீரை கொடுக்க]

நாய்க்கர்:- ஏண்டா நாங்கள் இல்லே என்று சொல்லும்போது நீ ஏண்டா கொடுத்தே போடா டேய்..........................

[தண்ணீர் சாப்பிட்டு விட்டு]

கட்டபொம்மு:- அய்யா உங்கள் பெயர் என்ன?

தேவர்:- என் பெயர்தான் கூலிக்கு உழும் குப்பண்ணதேவன் நீங்க யாரு?........................

கட்டபொம்மு:- உயிரோடு இருந்தால் உம்மை கொஞ்ச நாளேயில் சந்திக்கிறேன்...................... (போக) .. ...... ..

[இடம் கோலார்பட்டி வெள்ளேயம்மாள் இடம் வேகமாய் சென்ற]

ஊமதுரை:- வெள்ளேயம்மா? உன் அண்ணு என்னே உன்னிடம் அனுப்பினுர் நீ உடனே கவுனகிரி சுரங்கத்தை எனக்கு காட்டி விட்டு நேராக உன் அண்ணுவிடம் போய் பார்

வெள்ளேயம்மா:- சரி வா ஊமதுரை என்பது நீதானு?

[இடம் புதுக்கோட்டை அங்கு கட்ட பொம்மன் சென்றதும் அதைக்கண்ட]

அமைச்சர்:- அரசே! கட்டபொம்மன் அதோ...............

அரசன்:- வரட்டும் வரவேற்பு பலமாக இருக்கட்டும் இதற்குள் காலன்துரையிடம் ஆள்போகட்டும் எந்நாளும் வெள்ளே யன் இடம் தொண்டமான் வெருப்பு காட்டமாட்டான் நமக் குத்தான் இந்த நாடு சொந்தம் என்று சொல்லி விடுவான்

. (கட்டபொம்மு வர)

தொண்டமான்:- அவனிக்கு அஞ்சாத கட்டபொம்முவே வருக! வருக! தங்கள் வரவு நல்வரவாகுக (கட்டபொம்மு உட்கார)

கட்டபொம்மு:- தொண்டமான் இந்த நேரம் எனக்கு துணைசெய்

தொண்டமான்:- நான் தங்களுக்கு உதவி செய்வதா? இது முடியக் கூடியதா?......................

கட்டபொம்மு:- அய்யா! இந்தநேரம் ஆபத்து ஆனால் சிவகெங்கை மருதப்பாண்டி சில படைகள் அனுப்பினர் மருபடியு மனுப்ப ஏற்பாடு செய்கிறார் தாங்களும் செய்தால்......

தொண்டமான்:- அப்படியே செய்கிறேன் களைப்போடு இருக்கிறீர்கள் எண்ணை தேய்த்துக்கொண்டு குளியுங்கள் சாப்பிட்டு தூங்குங்கள் இதை ஒருவகையாக நான் முடிக்குறேன்.

[கட்டபொம்மு படுத்து தூங்க வெள்ளையன் படைகள் தொண்டமான் அரண்மனை சுற்றிலும் இருக்க இதை பார்த்த காலன்]

காலன்:- பிடித்துக்கட்டுங்கள்.. .........நாயை

[பிடித்து மாரிலும் காலிலும் சங்கிலிபோட]

கட்டபொம்மு:- மடையர்களே காட்டிக்கொடுத்த கயவர்களே வெட்கமில்லை?

காலன்:- வீராப்பு ஏனடா

தொண்டமான்:- பிடிப்பட்ட நாய் குலைக்கிறது

கட்டபொம்மு:- அட அயோக்கியர்களே பிடிப்பட்டதாக எண்ணி பெருமை கொள்ளாதே உங்களை அழித்து ஒழிக்க இருக்கிறான்...........ஊமதுரை...........மருதுபாண்டி

காலன்:- யார்? அந்த மடையன் மருதுபாண்டி

தொண்டமான்:- அவன்தான் சிவகெங்கை ராஜா

காலன்:- இந்த நாயை தூக்குமேடைக்கு கொண்டு செல்லுங்கள் செல்லட்டம் படை சிவகெங்கைக்கு

இடம் :-

# தூக்குமேடை

காலன்:- வற்ருத நதிகள் குற்ருலம் போன்ற குன்றுகள் கொண்ட குளிர்ந்த நாடு இங்கே அன்னியனுக்கு வேலே இல்லே என்று ஆவேசமான சொர்க்களே அள்ளி பொழிந்த கட்டபொம்மா? இப்போது எங்கே? உன் ஆவேசம்? எங்கே உன் கடு கடுப்பு? எங்கே உன் துடி துடிப்பு? பார்....(சிரிப்பு)....நன்ருக பார் இன்னும் சற்று நேரத்தில் பீரங்கிக்கு அஞ்சாத உன் நெஞ்சம் குண்டுக்கு அஞ்சாத உன் கோரகண் இவைகளே காகமும் கழுகும் கொத்தி கொள்ள போகிறது குதுகளிப்போடு அதை கண்டு களிப் புற்றும் வாழட்டும் இந்த கன்னியமான குணம் படைத்த பாளேயக்காரரும் தொண்டமானும் துலேந் தான் துன்மார்க்கன் அழிந்தான் அதர்மக்காரன் என்று ஆனந்த மடையட்டும் எட்டு திசையிலும் வெற்றி முழக்கம் இட்ட வீரர் கட்டபொம்மா! நீ மடியபோகும் நேரம் இருட்டில் கால் எரடி யானே யின் பாதத்தில் வீழ்ந்த நேரம் திருட சென்றவன் திசை தவரி போலீஸுக்குள் நுழைந்த நேரம் கட லிலே சென்ற படகோட்டி சுழலால் கடலில் குதித்து தத்தளித்து கொண்டு தவிக்கும் நேரம் பூனே இடம் அகப்பட்ட எலி புதரிலே போய் வீழ்ந்த தேரை புக ழும் உன்படை சுழலும் உன் வாள் கட்டான உன் கோட்டை தவிடு பொடியாக போகிறது பார் வானம் முதல் பூமிவரையில் வாழ்ந்தாலும் வாரம் என்று யார் வந்தாலும் வாள் முனேயிலே போர்

களத்திலே பிணக்குவியல் மீது வாங்கி கொள் ளட்டும் என்று வரட்டு வாய் வீரம் பேசினுயே பார் ஆரவாரமிட்ட உன் அங்கம் இரும்பு சங்கிலிகளால் பிணைக்க பட்டதைபார் உன் கர்ச்சனை எல்லாம் என் காலடியில் வீழ்ந்து கிடப்பதை பார்.....(சிரிப்பு).....

கட்டபொம்மு:- நிருத்தடா நாயே? எதிர்த்து கேட்க்கா விட்டால் குலைக்கிறது பிடிபட்டேன் என்று பெருமை கொள் ளாதே ஒரு கட்டபொம்மனை பிடித்து விட்டதாக உல்லாச தென்ரலிலே ஊஞ்சல் ஆடலாம் சந்தோஷ பந்தலிலே சிரித்து மகிழலாம் இந்த நாட்டிலே தோன்ற போகும் ஓர் ஆயிரம் கட்டபொம்மன் இடம் உன் கொட்டம் செல்லாது அடே வெள்ளையனே எனக்கு பிறகு வெள்ளையனே வெளியேபோ என்று பல பாரத மக்கள் தோன்றுவார்களடா ஆணவம் பிடித்த வெள்ளையனே அப்போது உன் பரம்பரை யார் யாரிடமும் சொல்லாமல் எங்கள் செந்தமிழ் நாட்டை திரும்பிக்கூட பார்க்காமல் போகும் காலம் வரும் அப்போது உன் சட்ட திட்டமெல்லாம் சுட்டு சாம்பலாக்கப்படும் காட்டிக்கொடுத்த தொண்ட மானும் பாளயக்காரரும் கழுகுமரத்தில் ஏற்றப்படு வார்கள் கட்டபொம்மன் தூக்கில் இடப்பட்டான் என்ற குரல் ஒலிக்கட்டும் என் துயர் ஒலி பரவட் டும் துள்ளி எழட்டும் வாள் வீரர் அரியாச் சேயு டன் அனைவரும் திரண்டு என்றைக்கோ ஒரு நாள் உங்களை விரட்டி அடிக்காமல் விடமாட்டார்கள் காட்டிக்கொடுத்த கயவனை கண்ட துண்ட மாக்கா மல் இருக்க மாட்டார்கள் என்நாடு அத்தனை உணர்ச்சி அற்ற நாடு அல்ல? வீரம் அற்ற நாடு அல்ல? போருக்கு அஞ்சாத நாடு புரமுதுகு காட்

டாத நாடு பேடி குணம் படைத்து பின் நின்று தாக்கும் நாடல்ல? நேருக்கு நேர் போர் புரிந்து மாரிலே வாள் ஏந்தி மடியும் நாடு? கேளடா கேள்? கேலி செய்யும் காலனே கேளடா? என் நாட்டை திரண்ட மேகம் தேன் மழை பொழிவது போல் செல்வம் ஜொலிக்கும் சோழ நாடு சொல்லுக்கு எல்லை தாண்டா சுத்த வீரன் ஆண்டநாடு நல்ல மழைகள் பெய்து நஞ்சைகள் நிறைந்த புஞ்சைகள் விளையும் நற்றமிழ் நாடு கொற்றவன் காட்டும் திசையை எட்டி பிடித்திடும் எதர்க்கும் அஞ்சாத இதயதம் கொண்ட தொண்டர்கள் நிறைந்த வண்டமிழ் நாடு இங்கே இந்த நாட்டில் அன்னியனுக்கு வேலை இல்லை விரட்டியடிப்பார்கள் கட்டபொம்மனுல் மூட்டபட்ட தீ அணைந்து விட்டதாக எண்ணி ஆர்வாரம் செய்கிருய் அது அணையாது என் இதயம் பிணமானதும் பரவுகிறது அது தலையிலும் கொடியிலும் புகைந்து கொண்டே இருக்கும் திடீரென அந்த தீ காட்டி கொடுத்த கங்காணிகளான மாளிகையான இலவம் பஞ்சு கோட்டையை எட்டி பிடிக்கும் அப்போது அடக்கி ஆள நினைக்கும் வெள்ளையன் எண்ணை டாங்கில் பற்றி கொள்ளும் அதை அணைக்க முடியாது அதிலே அன்னியன் அடக்கு முறை அழிந்து போகும் மடையர் வாழும் இடமெல்லாம் சுடுகாடாக மாறிவிடும் சூட்சிக்கார தொண்டமானும் பாளயக்காரரும் சுட்டு சாம்பலாக்க படுவார்கள் சுத்த வீரர்கள் தோன்றிய நாடடா இது இரக்க பயந்தவன் அல்ல மரணத்திற்கு அஞ்சி மனம் கலங்கவில்லை நான் உன் பீரங்கி பிரயோகம் எனக்கு மலர் மாலை உன் துப்பாக்கி குண்டுகள் எனக்கு கையில்

ஏந்தும் பூச் செண்டு உன்னை பரவசமாக வாழ விட போகும் இந்த பலிபீடம் எனக்கு மலர் அணை இவைகளுக்கு நான் மனங் கலங்க வில்லை வேறு நாட்டவனான வெள்ளையனுக்கு காட்டி கொடுத்த கங்காணி இந்த தொண்டமானைபோல் உள்ளவரை யும் பயந்த பாளையக்காரரையும் கொண்டு எங்களை அழித்துவிட்டதாக எண்ணாதே ஒரு கட்டபொம்மன் இறந்துவிட்டான் என்று எக்காளமிடாதே ஒருயிரம் கட்டபொம்மன் உதயமாவாரிங்கே அந்த சமயத் திலே இந்த கட்டபொம்மன் புகழ் ஓங்கும் காட்டிக் கொடுத்த கங்காணிகளை நாட்டைவிட்டே ஓட்டுவார்கள்

காலன்:- அடங்கிபேசடா என்றால் ஆத்திரம் கொள்கிறான் வணங்கி நில்லடா என்றால் வாதாட்டம் செய்கிறான் அறிவும் ஆற்றலும் பெரிதென அவனிக்கு எடுத்துக் காட்டிய நாடாம் நீதியும் நேர்மையும் நெளிந்தோடும் பூஞ்சோலை என்கிறான் இறக்கப்போகும் சமயத்தில் கூட பரக்குறான் இரக்கை அற்ற பட்சி என்பதை யும் மறந்து இருமாப்பு கொள்கிறான் கட்டி இருப்ப தையும் மறந்து கடும் சொற்களை வீசுகிறான் வீரர் கள் தோன்றி வெள்ளையரை விரட்டுவார்களாம் காளைகள் தோன்றி காட்டிக்கொடுத்தவரை அழிப் பார்களாம் இவன் மூட்டிய புரட்சித் தீ அணையா தாம் அது எங்களை ஒழித்தே தீருமாம் கயற்றிலே தொங்கப்போகும் நேரத்தில் கத்துகிறான் உயிர் ஊசலாடும் சமயம் பஜனை பாடுகிறான் பரதேசிப் பயல்............(சிரிப்பு)...........நடக்கட்டும்

கட்டபொம்மு:- நல்லொழுக்கம் என்பதை அறியாத நாதாரிக் கூட்டமே! போர் பித்துபிடித்து புகையை மூட்டி புறமுதுகுகாட்டி ஓடும் போலி கூட்டமே! உனக்கு

தெரியாது தமிழன் பண்பு உனக்கு தெரியாது தமிழன் நேர்மை போர் என்ருல் அடிமை படுத்த வந்த அன்னியன் என்ருல் போரை போர்களத்தை பூத்துக் குலுங்கும் பூங்காவனம் என்று புகுந்து போர் முரசு கொட்டுவோம் புன்னகை பூத்த மல்லிகை மலர்கன்ன மங்கை முதல் மார் ஏந்தி நிற்கும் கள்ளர் மறவர்கொண்ட கன்னித் தமிழ் நாடடா இது! புன்னகை காட்டி இந்த மண்ணை அடிமை படுத்த வந்த போலி வேஷமிட்ட காலிகளே! நயமாய் பேசி நவாப்பை நள்ளிரவில் படை எடுத்து நசிக்கி விட்டோம் என்று நர்த்தனமாடும் எத்தனே வழி தெரியாமல் திகைதப்பி வந்த பித்தனே! கரியும் இரும்பும் தவிர மற்றதை அன்னியரிடம் எதிர்பார்க்கும் மட்டரக மண்ணிலே உதித்த மடையனே! என் நாடு ஆலையும் சோலையும் வாளையும் கரும்பும் தங்கமும் இரும்பும் கெந்தகம் பஞ்சு முத்து பவளம் பாவலர் நாவலர் சூழ்ந்திட்ட நாடடா! இமயமும் குமரியும் தமிழனின் இன்னிசை ஒலித்திட்ட நாடடா! வஞ்சகரை வீழ்த்தி தமிழனின் மணிக்கொடி வானிலே பறந்திட வாழ்ந்திட்ட நாடடா இது! சிரித்து சிங்காரிகளை நீட்டி சிரப்புற்று வாழ்ந்த செந்தமிழ் நாட்டு சிற்றரசரை சிதரடித்து சிம்மாசனம் வீற்றிருக்கும் செந்தேள் கூட்டமே! என்னைப்பிடித்து விலங்கிட்டு விட்டோம் என்று வீரம்பேசும் சோம்பேரி கூட்டமே என் வாளைக்கொடுத்து விலங்கை எடுத்து விடு போர் செய்து போரிலே மடிந்தாலும் வீரத்தோடு வீரமுழக்கமிட்டு மடிகிறேன் வெள்ளையனல் வீழ்த்த பட்டான் வீர கட்டபொம்மன் என்று வேறு நாட்டவர் கூரட்டும் தமிழ் நாட்டவர் தலை குனியட்

டும் என்றைக்காவது இதை பார்த்து தாய் நாட்டை நினைத்து கன்னியமாய் வாழ்ந்த நாடு கயவரின் காலடியில் கிடப்பதை நினைத்து ஏழைகளின் இதயம் எரிமலையாகட்டும் கோழைகளின் மனம் பதரட்டும் காளைகள் இதயம் குமுரட்டும் காட்டி கொடுத்த கங்காணிகள் கண்ணீர் விட்டு கதரட்டும் என்னை விட்டு பாரடா செத்த பாம்பை அடிப்பது போல் நிராயுத பாணியாக நித்திரையில் இருக்கும் சமயம் தத்தாரிகளால் என்னை பிடித்த இரக்கம் அற்ற அரக்கனே நெளிந்தோடும் நீலபுரு என்ற நீலிகளை காட்டி நினைத்ததை சாதித்த நிர் மூடனே வளைந்தோடும் வஞ்சி கொடியோடு கொஞ்சி குலாவலாம் என்று சில கொற்றவரை வசபடுத்தி கூடாரம் அடித்து நாட்டை கொடுமை புரியும் கொடியவனே உங்கள் கூட்டத்தை கூண்டோடு கொளுத்தி விட கொதித்தெழும் வீரர்கள் உதிப்பார்களடா உலுத்தனே அப்போது உன் அதர்மம் அழியட்டும்

காலன்:- இரவில் நரி ஊளை இடுவதை போல் எள்ளி நகையாடுகிறான் கசாப்பு கடைகாரன் கத்திக்கு இரையாகும் ஆடு சப்தம் இடுவதை போல் கத்துகிறான் வலையிலகப்பட்ட மான் என்பதை அறியாமல் வசைமாரி பொழிகிறான் குண்டுக்கு இரையான நாரை என்பதை அறியாமல் கொக்கரிக்கிறான் கசங்கிய மலர் என்பதை உணர்ந்தும் கன்னிப்பெண் கூந்தலில் மலரும் என்கிறான் வில்லுக்கு இரையான கானும்கோழி என்று தெரிந்தும் வீரமான கர்ச்சனை செய்கிறான் வாலுக்கு இரையாக போகும் வான் கோழி வாத்தை கொன்று விட குதித்ததை போல்

வாளை கொடுத்தால் வையகத்தை எதிர்ப்பேன் என்கிறான் ஒருவனை பிடித்ததும் தூக்கில் இடுவது எங்களுக்கு அழகல்ல உன் இஷ்டத்தை வெளி இடு என்றால் அக்கினி மழை பொழிகிறான் ஆலமரம் வெட்டி சாய்கிர சமயம் ஆணிவேரை அசைக்க முடியாது என்று அலறுகிறான் கதறுகிறான் கத்தாதே கழுதை என்றால் சத்தான உணவு என்கிறான் மடையன் இவன் இடம் இனி எதுவும் கேட்க்க வேண்டாம் வேண்டிய அவசியமும் இல்லை நடக்கட்டும் நரபலி..........ம்..........ஆகட்டும்

கட்டபொம்மன்:- தூங்கும் சமயம் சிரை பிடித்த துன்மார்க்கர் கூட்டமே சொந்த நாட்டானை கொட்டி ஓடி வந்த ஊதாரி கூட்டத்திற்க்கு நாட்டை காட்டி கொடுத்த கொடிய விஷப்பாம்புகளே பார் ஆண்ட இனத்தை பகைவனுக்கு இரை கொடுத்த பஞ்சோந்தி பாளயக்கார கூட்டமே புன் சிரிப்பால் எங்கள் பூந்தோட்டத்தை உன் புகழ் இட மாக்கி கொண்ட புல்லுருவிகளே செல்லரித்து போன உங்கள் இனத்தை சிம்மாசனம் ஏற்றி வைத்த சிலந்தி பூச்சிளே வளமிருந்த எங்கள் வண்ணமலர் தோட்டத்தை உன் துரைமுகமாக்கி கொண்ட துரை என்ற மடையர்களே ஆரம்பித்துகொள் உன் வேலையை நிராயுத பாணியான வீரனை தூக்கிலிட்ட நீசர்கள் என்று என் பரம்பரை பதைக் கட்டும் காட்டி கொடுத்தான் பாளயக்காரனும் தொண்டமானும் என்று மக்கள் மனம் குமுரட்டும்

காலன்:- நடக்கட்டும் வீரம் பேசும் இந்த நாய் கழுத்தில் கயறு முத்தமிட வேண்டும்....ம்....சீக்கிரம்....ம்....

மடியட்டும் மடையன் மமதை கொண்ட மடையன் மண்ணோடு மண்ணாகி போகட்டும் மற்றவர்கள் இதை கண்டு வெள்ளையரை எதிர்க்க முடியாது என்று வீழ்ந்து சாகட்டும் பாளயக்காரர் பயமின்றி வாழட்டும்.........ம்.........மாட்டுங்கள் கயற்றை இனி பேச விடாதீர்கள்

(தூக்கிட போக)

கட்டபொம்மன்:- அடா ஊதாரிகளே என் உடன் பிறந்த தம்பி ஊமதுரையை ஒரு முறை பார்க்க செய்யடா? என் இதயம் சாந்தி பெறும் சந்தோஷ மடையும் இதை செய்யடா? என் செந்தமிழ் நாட்டை பார்த்து சிரித்து மடிகிறேன் எ! முத்துக்கடல் கொண்ட முல்லை மணக்கும் முத்தமிழ் நாடே! என்னை இரையாக்கி என் நாட்டை அடக்கி ஆளும் இந்த அனியாயக் காரரை என் உடல் அழிந்தாலும் என் குரல் என் எண்ணம் ஈடேர நீங்கள் இந்தவெள்ளையனை விரட்டி நம் நாட்டை சுதந்திர நாடாக்கி அதிலே காட்டிக் கொடுத்த கங்காணிகளைப்போல் உள்ளவரை ஒழித் துக்கட்டி உலகிற்குமுன் என் நாடு **சுதந்திர நாடு** என்று கூறினல் அந்த நேரம் இதற்க்கு முதல்படி **வீரபாண்டியக் கட்டபொம்மன்** என்று நினைத்தால் போதும் என் தாய்நாடே வருகிறேன் வணக்கம்.

காலன்:- அழியப்போகும் சமயம் அண்ணு தம்பி என்று அல ருகிருன் அதெல்லாம் நடவாது முடியாது நடக் கட்டும்.........ம்.........

**(தூக்குமாட்டி விடுதல்)**

கட்டபொம்மன் இறக்க இதைக்கேட்டு சிவ கெங்கை மருதுபாண்டி புதுக்கோட்டை மீது படையெடுக்க வெள்ளையம்மாள் மூலம் கட்டபொம்மன் இறந்ததை அறிந்த ஊமதுரை சுரங்கத்தில் தன் வாளால் தற்கொலை செய்துக்கொண்டார் இதைக் கண்ட வெள்ளையம்மாளும் இறந்தாள்.

முற்றிற்று.





**இவர் தான் இப்புத்தகத்திற்க்கு ஆசிரியர்.**

கலைமகள் அச்சகம் காலாடிப்பேட்டை சென்னை 19.

பாஞ்சாலங்குறிச்சியில் வீரப்புரட்சியை உண்டாக்கினவர் யார்?

மலைகள் நிலை குலைந்தாலும்மனம் கலங்கா மாவீரன் யார்?

பரதேச வெள்ளையனே வா
என்னோடு சண்டைக்கு என்று கூப்பிட்டவர் யார்?

வானம் பொழியுது பூமி விளையுது மன்னவன் காணிக்கு
கிஸ்தி ஏது? என்று வெள்ளையனுக்கு புத்தி புகட்டியவர் யார்?

**இ வ ர் தா ன்**

# வீரபாண்டியன் கட்டபொம்மன்

**வ ர லா ற் றை**

சினிமாக்களில் திரை வசனம், இயற்றும்

**ஆர். வி. பதி அவர்களால்**

ஆண்மையூட்டும் ஆவேச நடை

அனல் தெரிக்கும் அடுக்குமொழி சொற்களால் எழுதப்பெற்ற

**கதை வசனத்தோடு கூடியது**

விலை அணா **0—12—0**

## ஆர். வி. பதி தீட்டியவைகள்

| | | | |
|---|---|---|---|
| சீரழிந்த சென்னை அணா | 2 | என்னைப்பார் அணா | 3 |
| நானுவிபச்சாரி | 3 | மணப்பந்தலிலே பிணம் | 8 |
| உதிரத்தை உரிஞ்சும் பேய் | 3 | சென்னையின் மீது போர் | 3 |
| மரக்கிளையில் பிணம் | 8 | தங்கையின் பாசம் | 8 |
| அபலையின் குரல் | 4 | அணைந்த விளக்கு | 6 |

கிடைக்குமிடம்:-

**T. R. பாலகிருஷ்ண முதலியார்**

கலைமகள் அச்சகம் காலாடிப்பேட்டை சென்னை 19